[6th February 1959

SRI V. SANKARAN : ரீஆர்கனேஷேஷனுக்குப் பிறகு எத்தனை எ. வி. டி. ஒக்கள் க்ளார்க்குகளாக மாற்றப் பட்டார்கள்.?

THE HON. SRI R. VENKATARAMAN : தனி கேள்வி வேண் டும்.

SRI A. GOVINDASAMY : அவுட்போஸ்டில் போட்டிருப்பவர் கள் அத்தனை பேர்களும் கமர்ஷியல் டாக்ஸ் டிபார்ட்மெண்டைச் சேர்ந்த வர்களா அல்லது வேறு டிப்பார்ட்மெண்டில் உள்ளவர்களையும் போட்டி ருக்கிருர்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டு இலாகாக் களிலிருந்து போடப் பட்டிருக்கிருர்கள். கமர்ஷியல் டாக்ஸ் டிப்பார்ட்மெண் டில் இருந்தும், டிரான்ஸ்போர்ட் டிப்பார்ட்மெண்டிலிருந்தும் போடப்பட்டி ருக்கிருர்கள். ஏனெனில் லாரிகளில் சாமான்களைக் கொண்டு போவதாக புகார்கள் வந்தால் அதை செக் செய்ய டிரான்ஸ்போர்ட் அதிகாரிகளும் நியமிக்கப் பட்டிருக்கிருர்கள்.

SRI S. LAZAR : பாதிக்கப்பட்ட நாலாவது கிரேட் உத்தியோகஸ் தர்களை திரும்ப வேலைக்கு அமர்த்துகிற போது ஏற்கனவே வேலையில் இருக்கக் கூடியவர்களை நீக்கி விட்டு இவர்களை நியமிப்பது அரசாங்கத் திற்கு தெரியுமா ? அப்படி நீக்கப்படுபவர்களுக்கு வேண்டிய வழிவகை கள் செய்து கொடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு வருடத்திற்கு குறைவாக இருக்கக்கூடியவர்கள் டெம்பரரி சர்வீஸைச் சேர்ந்தவர்கள். ஆகவே, பர்மனெண்ட் சர்வீஸில் இருந்து ஆள் குறைப்பு ஏற்படும்போது டெம்பரரி சர்வீஸில் உள்ளவர்களை போகச் சொல்லிவிட்டு பர்மனெண்ட் சர்வீஸில் உள்ளவர்களுக்கு வேலை கொடுக்கப்படுகிறது. 2, 3, 4 மாத டெம்பரரி சர்வீஸில் உள்ள நாலாவது கிரேட் ஊழியர்களை நீக்கிவிட்டு இவர்களுக்கு வேலை கொடுக்கப்படுகிறது.

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் பதில் அளிக்கிறபோது அவுட்போஸ்ட்களில் டிரான்ஸ்போர்ட் இலாகாவைச் சார்ந்த வர்களையும் நியமிப்பதாகச் சொன்னுர்கள். டிரான்ஸ்போர்ட் இலாகாவி லுள்ள பொறியியல் வல்லுவர்களை நியமித்து திறமையுள்ளவர்களை பய னற்ற துறையில் ஈடுபடுத்துவதற்குப் பதிலாக வர்த்தகவரி இலாகாவைச் சேர்ந்தவர்களைமட்டுமே இந்த அலுவல்களில் ஏற்படுத்த அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுதுள்ள சட்ட படி வர்த்தகவரி இலாகாவைச் சேர்ந்தவர்களுக்கு ஒரு மோட்டார் வெஹிகிளை நிறுத்துவதற்கோ அல்லது அதை பரிசீலனை செய்வதற்கோ அதிகாரமில்லை. ஆகவே டிரான்ஸ்போர்ட் இலாகாவைச் சேர்ந்தவர்களை நியமித்து பரிசீலனை செய்வதற்கு போட்டிருக்கிருர்கள். இதில், சர்க்கா ருக்கு அதிகமான லாபம் இருக்கிறது. திறமையுள்ள உத்தியோகஸ்தர் களை அங்கு போடுவதால் நமக்கு வருவாய் இப்பொழுது அதிகரித்துக் கொண்டிருக்கிறது. வெளியில் ஏமாற்றிக் கொண்டு கள்ளக்கடத்தல் செய் வது கூட ஓரளவு தடுக்கப்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : ஆள் குறைப்பு செய்கிற போது ஒரு வருடத்திற்கு மேம்பட்டவர்களை நீக்கிவிட்டு பின்னர் அவர் களுக்கு வேலை கொடுக்கப்படுவதாக கூறினுர்கள். ஆரம்பத்திலே இது பற்றி ஒரு முடிவு எடுத்திருக்கக் கூடாதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படித்தான் செய் யப்பட்டிருக்கிறது. டெம்பரரி உத்தியோகத்தில் இருப்பவர்களின் காலம் முடிந்து விட்டாலும் அல்லது காலி ஸ்தானம் இல்லாவிட்டாலும் அனுப்பு வது என்பது எல்லாயிடங்களிலும் ஒத்துக் கொள்ளப்பட்ட முறை. ஆகவே இதில் தவறு ஒன்றுமில்லை.

6th February 1959]

### *Karanthai Tamil College*

* 69 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri M. G. Muthukumaraswamy) : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1956–57, 1957–58-ல் தஞ்சை ஜில்லா கருந்தட்டாங்குடி (கரந்தை) தமிழ் கல்லூரியில் சேர்வதற்காகக்கிடைக்கப் பெற்ற மனுக்கள் எத்தனை ?

(ஆ) அவைகளில் எடுத்துக்கொள்ளப்பட்டவைகள் எத்தனை ?

(இ) அவைகளில் அனுபந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The number of applications received during 1956–57 and 1957–68 were 66 and 72 respectively.

(*b*) All these who applied have been admitted.

(*c*) The number of Scheduled Caste candidates admitted in 1956–57 was 4 and the number admitted in 1957–58 was 2.

SRI K. B. S. MANI : இந்த கல்லூரியில் அட்மிட் செய்யப்பட்டவர்களில், விடுதி வசதி இல்லாத சிலர் தனிப்பட்ட முறையில் சாப்பிட்டுக் கொண்டிருக்கவேண்டிய நிலை ஏற்பட்டதே, வருகிற ஆண்டிலாவது அப்படி நடக்காமலிருக்க அரசாங்கம் வேண்டிய வசதி செய்து கொடுக்க முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிக்கேள்வி போடவேண்டும்.

### *Sales-tax on drugs and medicines*

*70 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to exempt drugs and medicines from sales tax, if they come under perishable articles; and

(*b*) if so, what are the medicines that are classified as perishables?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir.

(*b*) Does not arise.

### *Courtallam*

* 71 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to develop Courtallam as a Tourist Centre?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes. Sanction has been accorded for the construction of a rest-house for the benefit of the tourists at an estimated cost of Rs. 1·7 lakhs during the current financial year.

[6th February 1959

SRI K. SATTANATHA KARAYALAR : இந்தப் பணம் செலவழிக்க பட்டுள்ளதா ? வேலை ஆரம்பிக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI. C. SUBRAMANIAM : எந்த இடத்தில் கட்டுவது என்று முடிவாகி தயாராகிக் கொண்டிருக்கிறது. கூடிய சீக்கிரம் வேலை ஆரம்பமாகும்.

*Minister's Pada Yatra*

* 72 *Q*—SRI .A. GOVINDASAMY : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1958–ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் அமைச்சர்கள் பாத யாத்திரை சென்ற சமயத்தில் பிரயாணப்படி வாங்கினார்களா ?

(ஆ) அமைச்சர்கள் பாத யாத்திரை சென்ற சமயம் சர்க்கார் அதி காரிகள் அவர்களுடன் வந்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The following Ministers undertook "Pada Yatra" in October 1958 :—

Minister (Finance).
Minister (Home).
Minister (Revenue).
Minister (Works).
They did not draw any travelling allowance.

(*b*) The District Welfare Officer and the Officials of the Public Works and Highways Departments accompanied the Minister for Works when the latter went on "Pada Yatra". Government officials did not accompany the other Ministers when they went on "Pada Yatra".

SRI A. GOVINDASAMY : பாத யாத்திரை போவதாக சொல்லிய ஒரு அமைச்சர் சென்னையிலிருந்து பூந்தமல்லி வரை காரில் சென்று அங்கிருந்து மாங்காடு வரை நடந்து அங்கு டிபன் சாப்பிட்டுவிட்டு, அங் கிருந்து குன்றத்தூருக்குச் சென்று சாப்பிட்டு விட்டு பின்னர் காரில் திரும்பி விட்டார் என்று சொல்கிறார்கள். இதுதான் பாத யாத்திரையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பாத யாத்திரை என்றால் நடப்பது. அவ்வளவுதான். கோவிந்தசாமி சொன்னதிலிருந்து, அவர் நடந்தி ருக்கிறார் என்று தெரிகிறது.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : பாத யாத்திரை என்றால் சென்னையிலிருந்து அவரது தொகுதி வரை நடந்து போகவேண்டு மென்பதா அங்கத்தினர் அபிப்பிராயம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பாதயாத்திரை எப்படி செய்ய வேண்டுமென்பதுபற்றி விதி ஒன்றும் கிடையாது. அவரவர்கள் உடம்பு சௌகரியப்படி செய்யலாம்.

*'We Tamil' Movement*

* 73 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the attention of the Government has been drawn to the agitation by the leaders of the 'We Tamil' Movement to burn the map of India; and

6th February 1959]

(*b*) if so, whether any steps have been taken in the matter?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The Government are watching the situation closely and will take appropriate action as and when necessary.

SRI S. B. ADITYAN : May I know whether the Government have any proposal at present to bring in legislation to penalise the burning of the map of India less Tamilnad?

THE HON. SRI C. SUBRAMANIAM : The hon. Member should wait and see.

SRI A. A. RASHEED : Have the Government any information as to the real intention of the movement to burn the map of India?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not know whether even the sponsors of the movement are aware of their own intentions. (Laughter.) Therefore it is rather difficult to say.

SRI T. KARIA GOUNDER : நாம் ' தமிழர் இயக்கம் ' என்று எழுதியிருக்கிறது. இதில் யார் யார் சேர்ந்தவர்கள் என்று அமைச்சர் சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : யார் வேண்டுமானாலும் எந்த இயக்கத்தை வேண்டுமானாலும் ஆரம்பிப்பதற்கு நம் நாட்டில் சுதந்திரம் இருக்கிறது. ஆகவே " நாம் தமிழர் " என்று வேண்டுமானாலும் ஆரம்பிக்கலாம். அல்லது " நாம் கன்னடர் " என்று வேண்டுமானாலும் கூட இங்கு ஆரம்பிக்க உரிமை இருக்கிறது.

### *Fire accidents*

* 74 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri M. C. Muthukumaraswamy) : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1954–55, 1955–56, 1956–57, 1957–58 (30—9—58 வரை) தஞ்சை ஜில்லாவில் நன்னிலம் தாலூகாவில் நடந்த தீ விபத்துக்கள் எத்தனை ?

(ஆ) மேற்படித் தீ விபத்துகள் ஒவ்வொன்றிலும் ஏற்பட்ட உத்தேச நஷ்டத் தொகை எவ்வளவு ?

(இ) மேற்படித் தீ விபத்துக்கள் ஒவ்வொன்றுக்காகவும் அரசாங்கம் அளித்த உதவித் தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The particulars are furnished in the form of a statement[a] which has been printed and placed on the table of the House.

### *Power looms*

* 75 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of non-cotton yarn powerlooms in this State :

(*b*) the places where they are working;

---

[a] Printed as Appendix II on page 233 infra.

(*c*) type of cloth produced; and

(*d*) market for these products?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Seven hundred and sixteen power looms, Sir.

(*b*) Most of them are concentrated in and around Komarapalayam, Pallipalayam and Elampillai in Salem district. There are a few centres also in the districts of Madurai, North Arcot and Coimbatore.

(*c*) Ribbons and plain varieties like dhoties, sarees and shirtings.

(*d*) The ribbons have an All-India Market besides a limited export market. Most of the other fabrics are being consumed within the State. Dhoties woven out of stable fibre yarn are exported in small quantities to countries like Malaya and Ceylon.

SRI K. SATTANATHA KARAYALAR : இவ்விதம் வைத்திருக்கக் கூடிய பவர் லூம்கள் தனி நபர்களால் ஏற்படுத்தப்பட்டு நடந்து வருகிறதா அல்லது தொழிற்சாலை அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டு நடத்தப்பட்டு வருகிறதா ? இல்லையென்றால் தொழிற்சாலை அடிப்படையில் நடத்தப் படுவதற்கு அரசாங்கம் வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : I have no information on the subject.

DEPUTY SPEAKER : With the permission of the House, I will take five more minutes and finish the rest of the questions.

SRI N. MARUDACHALAM : இம்மாதிரி விசைத் தறிகளை ஏற் படுத்துவதினால் கைத்தறிகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் வேலை யிழக்க வேண்டிய நிலைமை ஏற்படும் என்பதை அரசாங்கம் உணர்ந் திருக்கிறதா ? அல்லது அதற்கு வேறு ஏதாவது வழிகளை அரசாங்கம் தேடியிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பவர் லூமில் சாதாரணமான நூல் ஆடை தயாரிக்க ஏற்படுத்துவதற்கு அனுமதி கொடுப்பதில்லை Staple fibre yarn-தான் இதில் அமைக்கப்படுகிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த கைத்தறிகளில் நார் பட்டும் ரெயான் போன்ற நூல்களும் நெய்யப்படுவதால் இதில் இப் போது வேலை செய்து கொண்டிருக்கும் கைத்தறி தொழிலாளர்களுக்கு விசைத்தறிகளால் பாதகம் ஏற்படும் என்று தோன்றுகிறது. ஆகவே கைத்தறித் தொழிலாளர்கள் பாதிக்கப்படாதவாறு நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த தறிகள் வரு வதினால் கைத்தறித் தொழிலாளர்கள் பாதிக்கப்படமாட்டார்கள். இதில் ரிப்பன் தயாரிக்கப்படுகிறது. இதற்கு வெளி நாட்டிலும் இந்தியா விலும் நல்ல மார்க்கெட் இருக்கிறது. ஆகவே இதை அதிகமாக உற் பத்தி செய்யாமல் இருப்பது தான் குற்றமாகும்.

6th February 1959]

*Bus routes*

*76 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில், ஜில்லாவாரியாக, இப்போது,

(i) 1 முதல் 15 மைல் வரை,

(ii) 15 முதல் 75 மைல் வரை,

(iii) 75 முதல் 250 மைல் வரை,

உள்ள ரூட்டுகளில் ஓடும் பஸ்கள் எத்தனை இருக்கின்றன ?

THE HON. SRI V. RAMAIAH : A statement[a] furnishing the particulars is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : ராஜ்ய ரயில்வே போக்குவரத்து அதிகமாக இருக்கின்ற ஜில்லாக்களில் இருக்கின்ற பஸ் போக்குவரத்து வசதியைவிட ரயில் போக்குவரத்து குறைவாக இருக்கின்ற ஜில்லாவான வடாற்காடு ஜில்லாவில் பஸ் போக்குவரத்து வசதி குறைவாக இருக்கின்றது என்பதை சர்க்கார் அறியுமா ? அப்படியானால் அந்த ஜில்லாவில் அதிகமாக பஸ் போக்குவரத்து அதிகப்படுத்த சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : வடாற்காடு ஜில்லாவில் மாத்திரமல்ல, எல்லா ஜில்லாக்களிலுமே பஸ் போக்குவரத்தை அதிகப்படுத்தவேண்டும் என்பது தான் அரசாங்கத்தினுடைய எண்ணம்.

SRI S. LAZAR : இந்த மாத ஆரம்பத்திலிருந்து ஏற்கனவே ஓடிக்கொண்டிருந்த சில ரயில்கள் நிறுத்தப்பட்டுவிட்டதால் அந்த இடங்களில் அதிகமான பஸ்களை விடுவதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : எல்லா இடங்களிலுமே பஸ் போக்குவரத்தை அதிகப்படுத்தவேண்டும் என்பது தான் அரசாங்கத்தினுடைய விருப்பம். அதில் விசேஷமாக ஏதாவது கஷ்டங்கள் ஏற்பட்டால் அதிகாரிகள் கவனித்து அதற்கு வேண்டிய வசதியை செய்து கொடுப்பார்கள்.

SRI M. SELVARAJ : இப்போது தென்னாற்காடு ஜில்லாவில் 1 முதல் 15 மைல் வரை ஓடிக்கொண்டிருக்கும் பஸ்களின் எண்ணிக்கை 19 என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் 10 பஸ்கள் டௌன் பஸ்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் அங்குள்ள மக்களுக்கு அதிகமான சௌகரியம் கிடைக்கவில்லை. ஆகவே, இப்போது 1 முதல் 15 மைல் என்றிருப்பதை 1 முதல் 25 மைல் என்று மாற்றி பஸ் போக்குவரத்தை அதிகப்படுத்த சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : இவ்விதம் நினைத்தவுடன் விதிகளை மாற்றிவிட முடியாது. தென்னாற்காடு ஜில்லாவில் மாத்திரமல்ல எல்லா ஜில்லாக்களிலுமே அதிகமாக பஸ் போக்குவரத்தை ஏற்படுத்த வேண்டும் என்பது தான் சர்க்காரின் எண்ணம். தென்னாற்காடு ஜில்லாவில் அதிகமான பஸ்கள் வேண்டுமென்றால் அங்குள்ள மக்கள் எல்லாம் ஒற்றுமையோடு இருந்து அரசாங்கத்தினிடத்தில் தங்கள் கோரிக்கையை தெரிவித்தால், அதைப்பற்றி பரிசீலித்து சர்க்கார் தக்க நடவடிக்கை எடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

---

[a] Printed as Appendix III on page 234 infra.

[6th February 1959

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Are the Government aware of the fact that there are still 1942 model old buses which are very rickety, with the result there are lots of breakdown and passengers are put to unnecessary inconvenience? So, will the Government take steps to put more buses?

THE HON. SRI V. RAMAIAH : As far as the standard of vehicles in our State is concerned, I am proud to say that even in the private sector the operators have come forward to put in the best vehicles available. There might be one or two cases where old vehicles are put in. But even new operators themselves feel that plying old rickety buses is not paying them and everyone is going in for new model buses.

THE HON. SRI C. SUBRAMANIAM : I may inform the hon. the Leader of the Opposition that if he cares to visit other States, he will find that even 1920 model vehicles are used there.

SRI V. K. RAMASWAMY MUDALIAR : It does not mean that we should have rickety buses.

THE HON. SRI C. SUBRAMANIAM : It does not mean that but the condition of the vehicles also should be taken into consideration, particularly, when we are not manufacturing our own vehicles. It is uneconomical to take them off the road simply because they are old models. I do not think we can afford the luxury of having only new model buses. That can happen when we have our own manufacturing programme and I hope the hon. the Leader of the Opposition will take the economy of the country also into his consideration.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : I can speak from authority that it is very economical to run latest model buses instead of rickety buses.

*Medical College*

* 77 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal to start another Medical College during the course of the Second Five-Year Plan period ; and

(*b*) if so, where and when?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Rayon Pulp plant*

* 78 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Minister for Industries be pleased to state the possibilites of starting a rayon plup plant in the Nilgiris district?

THE HON. SRI R. VENKATARAMAN : The Nilgiris District has not been considered suitable for the location of a rayon pulp plant as the resources of wattle and eucalyptus wood available there at present are inadequate for a unit of economic size.

6th February 1959]

### *Slums*

* 79 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சென்னை நகர Slum Clearance Act-ஐ மற்ற நகரங்களுக்கும் விஸ்தரிப்பது சம்பந்தமாக மத்திய சர்க்காருக்கும், சென்னை சர்க்காருக்கும் நடைபெற்ற கடிதப் போக்குவரத்துக்களின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : There has been no correspondence between the State Government and the Union Government regarding the question of extending the provisions of the Madras Slum Improvement (Acquisition of Land) Act, 1954, to the mufassal areas.

SRI P. G. MANICKAM : ஸார், இந்த ஸ்லம் க்ளியரன்ஸ் ஆக்ட்டானது மற்ற நகரங்களுக்கு விஸ்தரிக்கப்படும் என்று இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் நாளது வரையிலும் அவ்விதம் அவை செய்யப்படவில்லை என்று தெரிகிறது. ஆகவே உடனடியாக இதை இதர நகரங்களுக்கும் விஸ்தரிக்க மத்திய சர்க்காரின் உதவியோடு, சென்னை சர்க்கார் உடனடியாக முன் வருமா ? முயற்சி எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் சென்னை சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளுமா என்று கேட்டிருந்தால் அதைப்பற்றி யோசிக்கலாம் என்று பதில் சொல்லியிருக்கலாம், ஆனால் மத்திய சர்க்காரின் உதவியோடு இந்த சர்க்கார் முயற்சி எடுத்துக் கொள்ளுமா என்று கேட்டிருப்பதால் இப்போது உடனடியாக முடியாது என்று தான் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது.

### *Houses for Harijans*

* 80 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Government have received any additional allotment from the Central Government in 1958–59 for the construction of houses for Harijans; and

(*b*) if so, the number of houses to be constructed?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI K. R. NALLASIVAM : ஸார், இந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவு பெறும் நிலையில் 5 சதமானம் வீடுகள்கூட கட்டி முடிக்கவில்லை என்று தோன்றுகிறது. ஆகவே, இன்னும் அதிகமான தொகையை மத்திய சர்க்காரிடமிருந்து பெறுவதற்கு இந்த சர்க்கார் உடனடியாக முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய அரசாங்கத்திலிருந்து 1957–58-ம் வருடத்திற்கு மூன்று லட்சம் ரூபாய் அதிகமாக ஒதுக்கி மத்திய சர்க்காரின் திட்டத்தின் கீழே வேலைகள் நடைபெற்று வருகின்றன. இதில் 15 லட்சத்து 9 ஆயிரம் ரூபாயை நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். இந்த முறையில் அதிகமாகத்தான் வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன.

[6th February 1959

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கிராமாந்திரங்களில் ஹரிஜனங்களுக்கு சிறிய அளவில் தான் வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டு வருவதாக தெரிகிறது. அடுத்த ஆண்டிலாவது ஹரிஜனங்களுக்கு அதிகமாக வீடுகளை கட்டிக் கொடுக்க சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

SRI A. GOVINDASAMY : ஸார். மேலூர் அடுத்த உச்சரிச்சான்பட்டி கிராமத்திலுள்ள சேரியில் வீடு கட்டுவதற்கு கல் அடித்து வைத்திருந்ததை கண்ட்ராக்டர் வாரிக்கொண்டு போய்விட்டதாக சொல்லப்படுகிறது. அதைப் பற்றி அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

DEPUTY SPEAKER : How can the Hon. the Member expect a reply from the Hon. Minister to this question?

*Fish breeding in paddy fields*

* 80-*B Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether fish breeding is encouraged in paddy fields; and

(*b*) if so, what are the varieties that are bred in paddy fields?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) Curps, Murrels and Cat fishes can be bred in paddy fields.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், நாட்டு இனங்களாக இருக்கக்கூடிய ஜரை என்ற வகை மீன்களை சம்பா பயிரில் வளர்ப்பது நல்லது என்று சொல்லுகிறார்கள். ஆகவே அம்மாதிரியான இனங்களையும் வளர்ப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இப்போது வளர்க்கப்பட்டு வரும் முரால் என்கிற சிறால் மீனும், கேட் பிஷ் என்கிற கெண்டை மீன்களும் நாட்டு இனங்களை சேர்ந்தது தான்.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note*.—An asterisk (*) at the commencement of a speec indicates revision by the Member.]

II.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont*.

DEPUTY SPEAKER : Now the discussion on the Governor's Address will be continued.

SRI S. PAKKIRISAMI PILLAI : தலைவர் அவர்களே, நேற்றைய தினம் ஒரு அவசரமான——அவசியமான——விஷயத்தைப் பற்றி விவாதிக்க வேண்டிய காரணத்திற்காக இந்தச் சபையின் விவகாரத்தை ஒத்திவைக்கவேண்டுமென்று ஒரு தீர்மானம் கொடுத்திருந்தேன். அதாவது "கெரோஸின் ஆயில்" நம் நகரத்திலும், கிராமங்களிலும் அதிக விலைக்கு விற்கப்படுகின்றது. இதைத் தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிவதற்காக அந்தத் தீர்மானத்தைக் கொடுத்திருந்தேன். அதை இன்றைக்கு எடுத்துக் கொள்வதாகத் தெரியவில்லை. அது என் அனுமதிக்கப்படவில்லை என்று அறிய விரும்புகிறேன்.

6th February 1959]

DEPUTY SPEAKER : We are now discussing the Governor's Address and members have got an opportunity to speak also about the higher price of kerosene also and there is no need for an adjournment motion now. I have disallowed it and I have already replied to the hon. Member. The discussion on the Governor's Address will be continued.

*SRI A. VEDARATHNAM : கனம் துணைத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் பேருரையைப் பாராட்டி கனம் ராஜாத்தி குஞ்சிதபாதம் அவர்கள் கொண்டுவந்த தீர்மானத்தை ஆதரிக்கும் முகமாக நான் சில வார்த்தைகளை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

இந்த ஆண்டு கவர்னர் அவர்களுடைய உரையில் எத்தனையோ சிறந்த அம்சங்கள் இருந்த போதிலும், அவற்றுள் மிக முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய விஷயம், நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுகின்ற விஷயமாகும். இன்னும் நம்முடைய மாநிலத்தில் நடந்திருக்கின்ற சிறந்த வேலைகள், அபிவிருத்தித்திட்டங்கள் எல்லாம் அதிலே காணப்படுகின்றன. மற்ற மாநிலங்களையும், நம்முடைய மாநிலத்தையும் சீர்தூக்கிப் பார்க்கிற காலத்தில், எல்லாம் இங்கே நல்ல முறையில் தான் நடந்திருக்கின்றன என்பதை கவர்னர் உரை மாத்திரம் குறிப்பிடவில்லை, ஏனைய வெளி மாநிலத்தினர்—மத்திய அரசாங்கத்தினர் கூட—அதைப் பாராட்டித் தான் கூறியிருக்கின்றார்கள். முக்கியமாக சில இலாகாக்களில் வேலைகள் அளவுக்கு அதிகமாக தாமதிக்கப்படுவதும், இன்னும் சில இலாகாக்களில் இருக்கின்ற லஞ்ச ஊழல்களும், கொஞ்சம் நிதி விரயமும் நீக்கப்பட்டுவிட்டால் நம்முடைய மாநில நிர்வாகத்திற்கு இணையான நிர்வாகம் வேறு எங்கும் கிடையாது என்றே சொல்லலாம். அவ்வளவு சிறந்த முறையில் நடந்து வருகின்றதை கவர்னர் அவர்கள் உரை எடுத்துக் காட்டுகின்றது.

அடுத்தபடியாக நம்முடைய சபையைப் பொருத்தவரையில், எவ்வளவோ அபிப்பிராய பேதங்களுக்கு இடமுள்ள விஷயங்கள் இங்கே விவாதிக்கப்பட்ட போதிலும், அவற்றை மிக கண்ணியமான முறையில் இந்தச் சபை நடத்தி வந்திருக்கின்றது என்பதை கவர்னர் அவர்களுடைய உரை எடுத்துக் காட்டுகின்றது. அதைத் தான் நேற்றுப் பேசிய எதிர் கட்சி அங்கத்தினர் கனம் ஆசைத்தம்பி அவர்கள் கூடக் குறிப்பிட்டார்கள். அதற்கு முக்கிய காரணம் அவர்களுடைய கட்சி என்று அவர்கள் குறிப்பிட்டதை நானும் ஏற்றுக்கொள்கிறேன். அவர்களுக்கு கவர்னர் உரையைக் கேட்க விருப்பம் இல்லாது போனாலும், கண்ணியமான முறையில் அவர்கள் சபையிலே இல்லாது வெளியே இருந்து சபையின் கௌரவத்தை காப்பாற்ற முன் வந்தது நல்ல யோசனை தான். அது வரவேற்கத் தகுந்தது என்பதில் சந்தேகமே கிடையாது. ஆனால் அவர்கள் தங்களுக்குள்ள அபிப்பிராய பேதத்தை, இதைக் காட்டிலும் இன்னும் கண்ணியமான முறையில் அவர்கள் இங்கே காட்டலாம்—காட்டுவதற்கு வசதி இருக்கின்றது. என்ன அவர்கள் குறிப்பிட்டார்கள் என்றால் "அந்த உரை எங்களுக்குத் திருப்தி இல்லாத காரணத்தினால் நாங்கள் அதை ஆதரிக்கவில்லை" என்று. அதுவே அவர்களுடைய மாறுபட்ட கருத்தைக் காட்டுவதற்கு ஒரு சான்றாகத் தான் ஆகும். இந்தச் சபையில் எல்லா விஷயங்களையும் பற்றிப் பேசுவதற்கு அங்கத்தினர்களுக்கு எல்லா உரிமைகளும் அளிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, அவர்கள் வராமல் இருந்ததை விட வந்திருந்து, அவர்களுடைய கருத்தை இங்கே அறிவித்திருக்க முடியும். அது ஒரு புறம் இருந்தும் கூட, அவர்கள் கடைப்பிடிக்கும் கொள்கையை இந்தச் சபைக்குள் மாத்திரம் வைத்துக் கொள்ளாமல், அதற்கு வெளியேயும் அதைக் கடைப்பிடிக்க முன் வருவார்களேயானால், இன்னும் சிறந்ததாக இருக்கும் என்ற விஷயத்தை இங்கே அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இந்தச் சபைக்கு வெளியிலும் அதே முறையை அவர்கள் கடைப்பிடிக்க முன் வரவேண்டும் என்று நான் விரும்புகின்றேன். அவர்கள் அப்படிச் செய்திருப்பார்களேயானால்—நீல்கிரிக்குப் போவதன் காரணமாக ரூ. 50,000 அதிக

செலவாகிறது என்று வருத்தப்பட்ட அவர்கள்—அதைக்காட்டிலும் பன்மடங்கு அரசாங்கச் சொத்துக்கு ஆகக் கூடிய சேதத்தையெல்லாம் காப்பற்றியிருக்க முடியும்—வெளியே அதே கண்ணியத்தைக் கடைப்பிடிக்க முன் வந்திருந்தால், அந்த விஷயத்திலும் தங்கள் கவனத்தைச் செலுத்துவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஒருவருக்குத் திருப்தியில்லாமல் இருக்கலாம். அபிப்பிராயபேதம் என்பது சகஜம். அது இல்லாதவர்களே இல்லை. கவர்னர் அவர்கள் வட நாட்டார் என்ற காரணத்திற்காகச் சென்ற ஆண்டு அவர்கள் உரையில் பங்கெடுத்துக் கொள்ளவில்லையென்றும், இந்த வருஷம் நீலகிரிக்குப் போகவேண்டும் என்று அரசாங்கம் தீர்மானித்திருக்கின்ற காரணத்தினால், அவர்கள் உரை நிகழ்த்துகிற நேரத்தில் பங்கெடுத்துக் கொள்ளவில்லை என்றும் குறிப்பிட்டார்கள். வட நாட்டார் இங்கே கவர்னராக இருந்து நிகழ்த்துகின்ற உரையில் அவர்கள் பங்கெடுத்துக் கொள்ள விரும்பவில்லை என்று சொன்னால், நம் தமிழ் நாட்டவரும் வெளி மாகாணங்களில் கவர்னராகப் போக அவர்கள் விரும்பக்கூடாது. அதே மாதிரி அங்கு இருக்கின்றவர்களும், நம் மாநிலத்திலிருந்து—தமிழ் நாட்டிலிருந்து—அவர்கள் கூறுகிற திராவிட ஸ்தானியிலிருந்து—கவர்னராகச் சென்றிருக்கின்றார்களே அவர்கள் விஷயத்தில் அவ்வாறு நடந்து கொண்டால் என்ன கூறுவார்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

அது ஒரு புறம் இருக்க, நீலகிரிக்குச் செல்வதில் அவர்களுக்கு விருப்பம் இல்லை என்று சொல்வதற்கு அவர்கள் கூறிய முக்கியமான காரணம் நிதி. நிதிச் சிக்கனந்தான் காரணம் என்று குறிப்பிட்டார்கள். "சிக்கனம்" காரணமாக இருக்குமேயானால் நான் முன் சொன்ன மாதிரி, பல இனங்களில் அவர்கள் இந்தச் சிக்கனத்தைக் கையாளமுடியும். அவர்கள் கூறியதில் அது மாத்திரம் காரணம் என்று தோன்றவில்லை. ஏனென்றால் அவர்கள் உரையிலே இன்னொரு பகுதியில் குறிப்பிட்டார்கள், யாரோ நண்பர்கள் இந்தத் தீர்மானத்தை ஒத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டதற்கு, இந்த மாகாணத்திற்கு தமிழ்நாடு என்று பெயரை மாற்றி வைக்க அரசாங்கம் சம்மதித்தால் நீலகிரிக்குப் போவதற்குத் தாங்கள் சம்மதம் அளிப்பதாகச் சொன்னார்கள் என்று. அதிலிருந்து யோசனை செய்து பார்த்தால்—அவர்கள் எண்ணம் நீலகிரிக்குப் போகக்கூடாது என்பதல்ல—இந்தச் சாக்கை வைத்துக்கொண்டு ஏதாவது அவர்கள் லட்சியத்தைச் சாதித்துக்கொள்ள வேண்டும் என்ற கருத்து அதில் மறைந்து காணப்படுகின்றதேயல்லாமல் சிக்கனம் காரணமாக என்றிருந்தால் தமிழ் நாடு என்று பெயரை மாற்றி வைத்து விட்டால், ரூ. 50,000 செலவாகும் என்பது, ரூ. 50,000 செலவாகாமல் ரூ. 50,000 வருமானமாக மாறி விடுமா என்ற விஷயம் எனக்கு விளங்கவில்லை—அவர்கள் கூறியதிலிருந்து.

எனக்கு முன் பேசிய மெம்பர் அவர்கள், "அது தமிழ் நாட்டின் எல்லைக்கு உள்ளே இருக்கும் இடம் தான், இருந்தாலும் ஐரோப்பியர்கள் அந்தக் காலத்தில் அங்கு போனதை காங்கிரஸ்காரர்கள் வெறுத்தார்கள், ஐரோப்பியர்களாகிய ப்ரின்ஸ் ஆப் வேல்ஸ், ஸைமன் கமிஷன் போன்றவர்களையெல்லாம் காங்கிரஸ் பகிஷ்கரித்தார்கள், அதே போன்று தான் வட நாட்டு மந்திரியையும் நாங்கள் பகிஷ்கரிக்கிறோம்" என்று அவர்கள் கூறினார்கள். இந்த இரண்டையும் அவர்கள் ஒப்பிட்டுச் சொல்கிறதை நோக்குகின்றபோது தான், அது விந்தையாக இருக்கிறது.

ஸைமன் கமிஷனையும், ப்ரின்ஸ் ஆப் வேல்ஸையும் காங்கிரஸ் மகா சபை பகிஷ்கரித்தது என்று சொன்னால், அவர்கள் இந்த நாட்டை அடிமைப் படுத்தி, எத்தனையோ கொடுமைகளைச் செய்தார்கள், ஜலியன்வாலா பாக் போன்ற அநீதிகளையெல்லாம் நடத்திவிட்டு, அவற்றை மறைக்கச் செய்வதற்காக ப்ரின்ஸ் ஆப் வேல்ஸ்ஸைக் கொண்டு வந்து இந்த நாட்டிலே ஊர்வலம் விட்டு, அந்த எண்ணத்தை மாற்ற வேண்டும் என்று வெள்ளையர்கள் நினைத்தார்கள். அதற்கு இடம் கொடுக்கக்கூடாது, அவர்களுக்கு நாம் அடிமை என்ற நிலையில் இருந்து கொண்டு, அவர்களை வரவேற்று உபசரிப்பது, ஊர்வலம் விடுவது முறையல்ல என்ற காரணத்திற்காகவும், ஸைமன் கமிஷனிலே ஒன்பது அங்கத்தினர்களும் வெள்ளையர்களாக

6th February 1959] [Sri A. Vedarathnam]

இருந்துகொண்டு இந்த நாட்டிலே அரசியல் சீர்திருத்தத்தைப்பற்றி விசாரணை நடத்துவது தவறு என்ற காரணத்திற்காகவும், அவற்றை பகிஷ் கரித்தார்கள். அதைக் காப்பியடித்து, இங்கே வட நாட்டிலிருந்து கவர்ன ராக நியமிக்கப்பட்டவரைப் பகிஷ்கரிப்பது என்று சொன்னால், அது சரியல்ல. அதோடு மாத்திரம் அல்ல, இன்னொன்றையும் சுட்டிக் காட்டினார்கள். இப் பொழுது சமீபத்தில் வந்த ட்யூக் ஆப் எடின்பரோவுக்கு வரவேற்பு அளித்ததைப் பற்றியும் அவர்கள் குறிப்பிட்டார்கள். அப்பொழுது பிரின்ஸ் ஆப் வேல்ஸ் வந்ததை பகிஷ்கரித்துவிட்டு, இப்பொழுது ட்யூக் ஆப் எடின் பரோவை வரவேற்கிறீர்களே என்று சுட்டிக்காட்டினார்கள். இந்த இரண் டுக்கும் உள்ள வித்தியாசத்தை அன்பர் ஆசைத்தம்பி அவர்கள் புரிந்து கொள்ளவில்லை, என்று சொன்னால் இவ்வளவு அரசியல் அறிவு படைத்த அவர்களுக்கு இதை ஏன் புரிந்து கொள்ள முடியவில்லை என்பது தான் எனக்கு வியப்பாக இருக்கிறது. அன்றைக்கு நம்மை அடிமையாக வைத் திருந்தார்கள். அதனாலே பகிஷ்கரித்தோம். இன்றைக்கு நாமும் அவர் களும் ஒரு நிலையில் இருக்கிறோம். நாம் சுதந்திர நாட்டிலே இன்று இருக் கிறோம். அவரும் சுதந்திர நாட்டிலேயிருந்து வருகிறார். சுதந்திர நாட்டு ராணியின் கணவராக இருப்பவர் இங்கு வந்த காரணத்தால் அவரை வர வேற்றோமே யல்லாமல், இன்றைக்கும் நம்மை அடிமையாக வைத்திருந் திப்பாரானால், ஒருக்காலும் இந்த வரவேற்பு அவர்களுக்குக் கிடைத்திருக்காது என்பதை நான் அவர்களுக்குச் சொல்லத் தேவையில்லை.

அதைப் போன்று அல்ல இப்பொழுது அவர்கள் கூறுகிறது. வட நாட்டுக்கும், தென்னாட்டுக்கும் பேதத்தைக் கற்பித்து, அவர்களிடத்திலே ஒரு துவேஷ எண்ணத்தைக் கொண்டு, அம்மாதிரி வேற்றுமை உணர்ச்சி யோடு பார்ப்பது அவர்களைப் போன்ற அறிவாளிகளுக்கு அது முறை அல்ல என்று தான் நான் கூற விரும்புகிறேன்.

"ஒன்றாகக் காண்பதே காட்சி
புலன் ஐந்தும் வென்றான் தன் வீரமே வீரம்
தன்னைச்சாகாமல் காப்பதே கல்வி,
பிறர் தம்மை ஏவாமல் உண்பதே ஊண்"

என்று சொன்னதற்கேற்ப, இம்மாதிரி வேற்றுமை உணர்ச்சியோடு, அந்த வெறுப்புக் கண்ணோடு இவற்றை நோக்கக்கூடாது, பார்க்கக்கூடாது என்று தான் நான் கூற விரும்புகிறேன்.

அசோகன் காலம் முதல், அதற்கு முந்தியும் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக பாரதம் ஒரு நாடாகவே தான் பாவிக்கப்பட்டு வந்திருக்கிறது. சிற்றரசர்கள் எத்தனையோ பேர் இங்கே ஆண்டு வந்த போதிலும்கூட, பாரதம் ஒரு நாடாக, நம்முடைய கலாச்சாரம், பண்பாடு முதலிய அனைத்தும் ஒன்றாகத்தான் நாம் கருதி வந்திருக்கிறோமே அல்லாமல், இதை அம்மாதிரி வேறு கண்களோடு இதுவரையில் நாம் பார்த்து வரவில்லை. எனவே இதில் வட நாட்டார், தென்னாட்டார் என்று பாகுபாடு செய்வதற்கு இடம் இல்லை என்ற விஷயத்தை நான் இங்கே கூற விரும்புகிறேன்.

இன்னொரு விஷயத்தையும் அவர்கள் கூறினார்கள். பக்ரா-நங்கல் அணை பஞ்சாப் தன்னுடைய சொந்த மாநில சொத்தாக வைத்துக் கொண்டிருக்கிறது, அஸ்ஸாம், எண்ணெய்க் கிணறுகளை தங்களுக்கு சொந்தமாக ஆக்கிக்கொண்டிருக்கிறது, அந்தப் போரிலே வெற்றி பெற்ற வர் தான் கவர்னராக இங்கே வந்திருக்கிறார் என்று குறிப்பிட்டார்கள். இப்படிக் குறிப்பிட்ட கனம் அங்கத்தினர் அவர்களுக்கு கொஞ்சம் ஞாபகத் தவறு இருக்குமோ என்ற விஷயத்தை இங்கே குறிப்பிட்டுக் காட்ட விரும் புகிறேன். எண்ணெய்க் கிணறுகள் சொந்தமாகவேண்டுமென்று போராட் டத்தில் வெற்றி பெற்று இந்த மாநிலத்திற்கு கவர்னராக வரவில்லை அவர். அவர்கள் மாநிலத்திலே கிடைக்கின்ற எண்ணெய் ஊற்றுக்களிலிருந்து எடுக்கப்படுகிற, சுத்தி செய்யப்படாத எண்ணெயை சுத்தி செய்கின்ற தொழிற்சாலையை வேறு இடத்திலே வைக்கவேண்டுமென்று முதலிலே யோசித்தார்கள். சுத்திகரிப்பு தொழிற்சாலை அங்கே தான் இருக்க வேண்டுமென்று அவர்கள் போராடி, அதை அந்த இடத்திலேயே இருக் கும்படியாக மாத்திரம் தான் செய்தார்களே அல்லாமல், அதைச் சொந்த

மாக்குவதற்காக அவர்கள் போராடி அதில் வெற்றிகண்டார்கள் என்று நண்பர் அவர்கள் கூறியது தவறு என்பதை அவர்களுக்கு நினை வூட்ட விரும்புகிறேன். பக்ரா அணை போன்ற அணைகள், அவ்வளவு பெரிய அணை நம்முடைய மாநிலத்தில் ஏற்படுத்துவதற்கு இங்கே வசதிகள் இல் லாது போனாலும், ஏற்படுத்தியிருக்கிற அத்தனை அணைகளும் நமக்குச் சொந்தமாகத்தான் இருக்கின்றன. ஒரு மாநிலத்திலே இருக்கும் அணைக்கட்டு அந்த மாநிலத்திலே இருக்கும் நிலங்களின் பாசன வசதிக் காகத்தான் ஏற்படுத்தப்படும்போது, அது இன்னொரு மாகாணத்திற்குச் சொந்தமாக எந்த இடத்திலும் அது இருக்க முடியாது. பஞ்சாப் அதிசய மாகச் செய்துவிட்டது என்றோ, நம்முடைய மாநிலத்திலே எந்த அணைக் கட்டையும் அவர்கள் இன்னொரு மாநிலத்திற்குச் சொந்தமாக வைத் திருக்கிறார்கள் என்றோ அவர்கள் குறிப்பிட முடியாது. ஏன் நெய் வேலியை நமக்குச் சொந்தமாக ஆக்கிக்கொள்ளக்கூடாது என்று அவர் கள் கூறுகிறார்கள். அவர்கள் நிதி விஷயத்தில் கொஞ்சம் ஆழ்ந்த சிந்தனை செய்து, அதை ஆராய்ந்து அறிந்திருப்பாரானால் இந்த விஷ யத்தில் அவர்கள் அப்படிக் கூறியிருக்கமாட்டார்கள் என்று தான் நான் கூற விரும்புகிறேன். நெய்வேலித் திட்டத்தை நம்முடைய மாநிலத்திற்குச் சொந்தமாக எடுத்துக்கொண்டிருப்போமேயானால், இந்த மாநிலத்தில் இப்பொழுது நடந்து வருகிற, ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு கிராமத் திலும் மூலை முடுக்குகளிலெல்லாம் நடந்து வருகிற அபிவிருத்தித் திட்ட வேலைக்கு எந்த வசதியும் வாய்ப்பும் இல்லாமல், இந்த மாநிலத்திற்காக உள்ள தொகை அனைத்தும் அந்த நெய்வேலித் திட்டத்தோடு சரியாகப் போய்விடும். மற்ற ஒவ்வொரு மாவட்டமும் சும்மா இருக்க வேண்டியது தான். எனவே தான், புத்திசாலித்தனமாக நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள், அதில் ஒரு பகுதியை மாத்திரம் இந்த மாநிலத்திற்குச் சொந்த மாகவும், மற்றதை மத்திய அரசாங்கத்திற்குப் பொறுப்பாகவும் வைத்த காரணத்தினால் நம்முடைய மாநிலத்தின் வளர்ச்சிக்குரிய தொகையும் பூரணமாக நமக்குக் கிடைத்திருக்கிறது. அதைக்காட்டிலும் அதிகமாக உபரி யாக இன்றைக்கு நெய்வேலித் திட்டத்திற்கும் வேண்டிய நிதி மத்திய அரசாங்கத்திலிருந்து இப்பொழுது கிடைத்து வருகிறதை நான் அவர்களுக்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

மற்ற திட்டங்கள் அங்கே எல்லாம் முடிவாகிவிட்டன. பிலாய், ரூர்கேலா என்னும் இடங்களில் இப்பொழுது உருக்கு உலைகள் எல்லாம் வேலை ஆரம் பித்துவிட்டன. சேலம் அப்படியே இருக்கிறது என்றெல்லாம் அவர்கள் குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி சமீபத்திலே வந்த அறிக்கைகளைக் கூர்ந்து கவனித்தவர்கள் இம்மாதிரி குற்றச்சாட்டுக்களைச் சொல்ல முன்வரமாட்டார்கள் என்றே நான் கருதுகிறேன். அதற்கான என்ன வசதிகள் அங்கே இருக்கின்றன என்று நாம் கவனிக்கவேண்டும். பத்து மைலுக்குள் சுண் ணாம்புக் கற்கள், ஐம்பது மைலுக்குள் இரும்புச் சுரங்கம், அதற்கு வேண் டிய ஆற்றுத் தண்ணீர் பக்கத்திலேயே இருக்கின்றது, இதுபோன்ற எல்லா வசதிகளும் அங்கே அமைந்திருந்த காரணத்தினாலே, அதை முதலாவதாக எடுத்துக்கொண்டார்கள். நம் நிலக்கரிச் சுரங்கம் இத்தனை ஆண்டுகள் வரையிலும் நிலக்கரி எடுக்கும் நிலைக்குக் கூட வரவில்லை. இந்த இடத்திலே உருக்குத் தொழிற்சாலை ஆரம்பித்திருந்தால், நிலக் கரியைக் கண்டுபிடித்து, அப்புறம் பத்து ஆண்டுக்கப்பால் உருக்குத் தொழிற் சாலை வேலைக்கு வரும். இப்பொழுது நாள் ஒன்றுக்கு ஆயிரம் டன் இரும்பு உற்பத்தி செய்கின்ற தொழிற்சாலைகள் இன்றே அமுலுக்கு வந்து விட்டன. இந்த இடத்தை நாம் எடுத்துக்கொண்டிருந்தோமானால், இவ்வளவு விரைவில் அதைக் கொண்டுவர முடிந்திருக்குமா என்ற விஷயத்தை அவர்கள் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அன்றி, நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காரோடு சண்டை போட்டு பணம் வாங்க முடியவில்லை என்றும் இங்கே கூறப்பட்டது. அதற்கு ராஜா அவர்கள்கூட வட நாடு, தென்னாடு என்று பேசுகின்றார்கள் என்று அதற்கு உதாரணமாகக்கூட குறிப்பிட்டுக் காட்டப்பட்டது.

6th February 1959] [Sri A. Vedarathnam]

10-30 a.m.

ஒருக்கால் இதை அவர்கள் பழைய ஞாபகத்தில் பேசியிருக்கலாமோ என்னமோ ? அந்த நிலையில் இப்பொழுது பேசுவது அவசியம் கிடையாது. இந்நாட்டில் கைதொழில் அபிவிருத்தி வேண்டுமென்று சொன்னால், அதற்கு வட நாடு தென்னாடு என்று காட்டாமல் மத்திய அரசாங்கம் வேண்டிய பணம் கொடுக்கிறார்கள். எந்தத் தொழிலை யார் எடுத்து மூலதனம் போட்டு நடத்த முன் வந்தாலும் அதற்கு பாதி தொகையை மத்திய அரசாங்கம் கொடுக்க முன் வருகிறது. ஆங்கே இருக்கிற இண்டஸ்ட்ரியல் கார்போரேஷன் மூலம் 50 சத விகிதம் தொகையை கடனாகவோ, இன்னும் சில விஷயங்களில் மானியமாகவோ கொடுத்து உதவ மத்திய அரசாங்கம் என்றும் தயாராக இருக்கிறார்கள். இப்படி கொடுத்து வருகிற காலத்தில் இதை அறிந்தோ அறியாமலோ இதற்கு மாறாகக் கூறி மக்களுடைய மனதை மாற்ற அவர்கள் முயற்சிக்கிறார்கள். அது எதற்கு என்பதுதான் எனக்குப் புரியவில்லை. இப்பொழுது எத்தனையோ தொழில்களுக்கு அனுவசியமாகக் கொடுக்கிறார்கள். இப்பொழுது பிலிம் தொழில் இருக்கிறது. அதற்குக் கொடுக்கக்கூடிய மூலதனத்தை எடுத்து மற்ற உபயோகரமாக இருக்கக்கப்பட்ட கைத்தொழிலுக்குக் கொடுத்து உதவினால் அதன் மூலம் எவ்வளவோ லட்சக் கணக்கானவர்களுக்கு வேலை கொடுக்க முன் வர முடியும். அதற்கு மாறாக அவர்கள் வட நாட்டிற்கு உதவி புரிகிறார்கள் தென்னாட்டிற்கு உதவவில்லை என்று கூறுவது அது நியாயமான கூற்று ஆகாது. இம்மாதிரி தவறான விஷயங்களை அறியாத பாமர மக்கள் மத்தியில் கூற முன் வராமல் இருப்பது நல்லது. அப்படிச் சொல்வது நியாயம் தானா என்று ஆராய முன் வரவேண்டும். எந்தத் தொழிலை ஆரம்பிக்க முன் வந்தாலும் அதற்கு பாதி தொகையைக் கொடுக்க மத்திய அரசாங்கம் தயாராக இருக்கிறது. தொழில் துறையில் ஆர்வம் உள்ளவர்கள் அதிகப்படியான தொழிலை ஆரம்பிக்க முன் வரவேண்டும். மத்திய அரசாங்கம் கொடுக்கக்கூடிய நிலையில் இருந்தும் அதை வாங்கிக் கொள்ள தயாராக இல்லாது இருக்க நிதி கொடுக்கவில்லை என்று குறை கூறுவது அவ்வளவு நியாயம் இல்லை என்ற விஷயத்தை நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாகக் கூறினார்கள் நிதி உதவுவதில் யூ.பி.க்கு நூற்றுக் கணக்கான கோடி ரூபாய் கொடுக்கப்படுகிறது என்றும் இங்கே அவ்வளவு கொடுக்கப்படவில்லை என்றும் இப்படிக் கொடுக்கும்போது ஜனத் தொகை விகிதாச்சாரத்தில் கொடுக்கப்படுகிறது என்பதை அவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். யூ.பி. நம்முடைய மாநிலத்தைக் காட்டிலும் இரண்டு பங்கு அதிகமாக ஜனத்தொகை உள்ளது. நம்மில் இருக்கக்கூடிய ஜனத்தொகையைவிட அங்கு அதிகமாக இருக்கிறது. அந்த நிலைமையில் சமமாக நிதி உதவவில்லை என்று கூறுவார்களேயானால் இந்த நியாயம் எங்கே இருக்கிறது என்ற விஷயத்தை அவர்கள் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

சண்டை போடவேண்டும் என்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். சண்டை போடுகிற விஷயத்தில் நம்முடைய மாநில மந்திரிகள் ஒவ்வொருவரும் குறைந்தவர்கள் அல்ல. சமீபத்தில் நடந்த அகில இந்திய மாநாடுகளிலெல்லாம், அங்கே நடந்த வாதங்களையெல்லாம், இவர்கள் எப்படி நடத்தினார்கள், அதனால் இவர்களுக்கு என்ன கீர்த்தி, புகழ் இருந்தன என்பதை அதை அறிந்தவர்களுக்குத்தான் தெரியும். அதைப்பற்றி அவர்கள் பெருமைபடுகிறார்கள். அது பெருமைக்கு குறைவு என்று யாரும் கூற மாட்டார்கள். ஜன விகிதாச்சாரத்தில் மத்திய அரசாங்கம் பாரா பட்சமாக நடக்கிறது என்று சொன்னால் அதில் நியாயம் இல்லை என்று நான் சொல்லவேண்டும். அது எப்படி சாத்தியம் என்பதையும் அவர்கள் நினைத்துப் பார்க்கவேண்டும். அப்படிக் கொடுத்தாலும் இங்குள்ளவர்கள் சும்மா இருப்பார்களா அல்லது மற்ற மாகாணத்திலுள்ளவர்கள் தான் சும்மா இருந்து விடுவார்களா என்பதையும் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நம் மாகாணத்தில் சும்மா இருந்து விட்டாலும்கூட மற்ற மாகாகணத்திலுள்ளவர்கள் சும்மா இருக்க மாட்டார்கள். ஆகவே மத்திய அரசாங்கம் ஜனத்தொகை விகிதாச்சாரத்தில் தான் நிதியை வழங்கி வருகிறார்கள். அதிக தொகை வேண்டும் என்று சொன்னால் ஒருக்கால் கணக்

[Sri A. Vedarathnam] [6th February 1959

ஆசைத்தம்பி அவர்கள் சொல்லலாம். இந்த மாநிலத்தில் இப்பொழுது நடைபெற்று வருகிற குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை ரத்து செய்து விட்டு பிரஜா உற்பத்தியைப் பெருக்கி அதன் மூலமாக அதிக ஜனத்தொகையை உண்டாக்கி அதன் மூலம் நமக்கு அதிகப்படியான நிதியைக் கொடுக்க வேண்டுமென்று சொல்லலாம். இல்லையானுல் அவர்கள் மீது இந்தக் குற்றச் சாட்டை சொல்லாமல் விட்டு விடவேண்டும். நமக்குள்ள ஜனத்தொகை விகிதாச்சாரத்தை வைத்துக்கொண்டு அதற்குத்தக்கபடி கிடைப்பதைக் கொண்டு திருப்தி கொள்ளவேண்டுமேயல்லாமல் தவருன குற்றச் சாட்டு களை கூறக்கூடாது. அப்படி சாட்ட இனியாவது முன் வரமாட்டார்கள் என்று நான் கருதுகிறேன்.

சபையின் கண்ணிய விஷயத்தைப்பற்றி அவர்கள் கூறிய ஒரு விஷயத்தை இப்பொழுது நினைவூட்ட விரும்புகிறேன். இந்த சபைக்குள்ளே அவர்கள் எந்த கண்ணயத்தைக் காட்ட விரும்புகிருர்களோ அதேயே அவர்கள் வெளியே காட்டவில்லை. அப்படிக்காட்டாமல் இருப்பதில் அவர்களுடைய கொள்கை என்ன என்பது அதிலிருந்து நன்ருகத் தெரிய வருகிறது. இந்த சபை யைக் குறித்து எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்ற ஒரு முடிவுக்கு அவர்கள் வந்திருக்கிருர்கள். எந்த கண்ணயத்தைப்பற்றி அவர்கள் சொல்லு கிருர்களோ அப்படிப்பட்ட கண்ணயத்தை அவர்கள் நேரு போன்ற பெரியவர் கள் வந்த காலத்தில் காட்டியிருக்கலாம். இங்கே மாத்திரம் அந்த கண்ண யத்திற்கு அவர்கள் பொறுப்பு என்று சொன்னுல்—அவர்களுக்கு பொறுப்பு இல்லை என்று நான் சொல்லவில்லை—வெளியேயும் அவர்கள் பொறுப் புள்ளவர்களாக இருக்கவேண்டும். நம்முடைய மாநில சர்க்கார் சார்பாக நம்முடைய சபையில் தலைவர்—லீடர் அப் தி ஹௌஸ், நமது நிதி அமைச்சர் அவர்கள் கடை பிடித்து வருகிற கொள்கை சிறந்ததாகும். இந்த சபையின் கண்ணயத்தை எந்த அளவில் காப்பாற்ற வேண்டுமோ அந்த அளவில் அவர்கள் காப்பாற்றி வருகிருர். அவரால்தான் (நிதி அமைச்சர்) அப்படி காப்பாற்றப்பட்டு வருகிறது என்பதையும் சபை கண்ணயமான முறையில் நடைபெற்று வருகிறது என்பதையும் அவர்களுக்கு எடுத்துக்கூற நான் விரும்புகிறேன்.

காங்கிரஸ் கட்சிக்கு இங்கே எவ்வளவோ மெஜாரிட்டி பலம் இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு எந்தக் காரியத்தை வேண்டுமானுலும் சாதித்து விடலாம். சபையை கண்ணயமாக நடத்த வேண்டுமென்ற கொள்கையினுல் அப்படி மெஜாரிட்டி பலத்தை வைத்துக்கொண்டு எப்படிப்பட்ட சிக்கலான விஷயத்தையும் நிறைவேற்ருமல் பல கட்சி தலைவர்களையும்—அவர்கள் மிக சிறுபான்மையினராக இருந்தாலும் கூட—அழைத்து எல்லா காரியத் தையும் செய்து வருகிருர்கள். தனக்கு அதிகப்படியான பலம் இருக்கிறது என்பதால் எந்த விதமான அதிகாரமும் செய்வது இல்லை. குற்றச் சாட் டுக்கு இடம் இல்லாமல் இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் எந்த விஷ யத்திலும் மற்றக் கட்சியின் தலைவர்களை அழைத்து கலந்து பேசி ஒரு முடிவுக்கு வருகிருர். இந்த முறையினுல் தான் நம்முடைய சபையின் கண்ணயத்தை அவர் காப்பாற்றி வருகிருர். இந்த விஷயத்தையும் கண்ணயத் தைப்பற்றி பேசியவர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். ஆகவே எந்த எண்ணத்தையும் அவர்கள் தவருன முறையில் வெளியே பிரதிபலிக்கும் படியாகச் செய்ய முன் வரமாட்டார்கள் என்று நான் எதிர் பார்க்கிறேன்.

இன்னெரு முக்கியமான விஷயத்தையும் அவர்கள் குறிப்பிட்டார்கள். இங்கே சென்னையில் இருக்கிற வானெலி நிலையத்தின் பெயரை அதாவது ஆகாசவாணி என்று இருக்கிற பெயரை மாற்றி அமைக்கவேண்டும் என்று அவர்கள் நேற்று—அது கவர்னர் அவர்களுடைய உரையில் இல்லாவிட்டா லும் கூட அதைப்பற்றி குறிப்பிட்டார்கள்—வானெலி என்று பெயரை மாற்றி வைப்பதனுல் ஒன்றும் தலை முழுகிப் போகாது. பெயரில் ஒன்றும் இல்லை. தனி நபர் எந்தப் பெயரை வேண்டுமானுலும் எப்படியும் மாற்றி வைத்துக்கொள்ளலாம். இங்கே பெயர் மாத்திரம் முக்கியமானது அல்ல. அதை மாற்றினுல் எல்லாம் சரியாகிப்போய் விடும் என்பது அல்ல. அப்படி போய் விடும் என்று நினைத்தால் அது தவருன எண்ணம். தவருன எண்ணம் என்று நான் அவர்களுக்கு சொல்லத் தயாராக இல்லை (சிரிப்பு)

6th February 1959] [Sri A. Vedarathnam]

அது மாயைப்போல் திரை போட்டு மறைந்திருக்கிறது என்பதை நான் கூற விரும்புகிறேன். இந்த மாநிலத்திலுள்ளவர்களுக்கு அது தெரிந்தும் தெரியாமலும் இருக்கலாம். அதைப்பற்றி கவலை இல்லை. அகில இந்தியாவுக்குப் பொதுவாக இருக்கக்கூடிய ஸ்தாபனங்களில் அப்படி மாற்றவேண்டும் என்று சொன்னால் அதனால் பலருக்கு புரியாமல் கஷ்டம் ஏற்படலாம். வானொலி என்று சொன்னால் கேரளாவில் இருக்கக்கூடியவர்களுக்கும், ஆந்தராவில் இருக்கக்கூடியவர்களுக்கும் கன்னடத்தில் இருக்கக்கூடியவர்களுக்கும் புரியும்படியாக இருக்குமா ? அவர்கள் கூறும் திராவிடஸ்தானில் இருக்கிறவர்களுக்கும் புரிந்தால் மட்டும் போதாது. அகில இந்திய ரீதியில் அது தெரிய வேண்டும். ஆகையால் தான் ஆகாசவாணி என்ற பெயரை வைத்திருக்கிறார்கள். ஆகாசவாணி செய்தி வருகிறது என்று சொன்னால் தான் எல்லோருக்கும் இங்கிருந்து செய்தி வருகிறது என்று தெரியும். அப்பொழுதான் சென்னையிலிருந்து ஓசை வருகிறது என்று தெரிந்துகொண்டு கேட்பார்கள். இலங்கையில் கூட அப்படி வைத்துவிட்டார்கள் என்று சொன்னார்கள். இலங்கையில் சிங்களம், தமிழ் இந்த இரண்டு பாஷைகள்தான் இருக்கின்றன. ஆனால் அகில இந்தியாவை எடுத்துக்கொண்டால் இங்கே தேசிய மொழியாக சுமார் 15 மொழிகள் இருக்கின்றன. அதனால் இங்கே ஆகாசவாணி என்று சொன்னால் தான் எல்லோருக்கும் புரியும். தமிழ் தெரியாத மலையாளிகளுக்கும், தமிழ் தெரியாத கன்னடியர்களுக்கும், அதேபோன்று ஆந்திரர்களுக்கும் மற்ற மானிலத்தோருக்கும் தெரியவேண்டும் என்பதற்காகத்தான் இந்தப் பெயரை வைக்கப்பட்டிருக்கிறது. அதனால் இதை மாற்றவேண்டுமென்பதில் அவசியம் இல்லை. அதை கனம் ஆசைத்தம்பி அவர்கள் தெரிந்துகொள்ளவேண்டும்.

10-40 a.m.

இதுவும் அதே விஷயம்தான். "மெட்ராஸ் ஸ்டேட்" என்று சொன்னால் அகில உலகத்தில் இருப்பவர்களுக்கும் தெரியும். மொசபடோமியாவில் மூலை முடுக்கில் இருக்கிறவர்களுக்குக் கூட "மெட்ராஸ் ஸ்டேட்" என்று சொன்னால் புரியும். தமிழ் நாடு என்று சொன்னால், இந்தியாவிலேயே விந்திய மலைக்கு அப்பால் இருக்கிறவர்களுக்கு இன்று கூடத் தெரியாது. அப்படிப்பட்ட பெயரில் ஏன் இந்த மாதிரி விருப்பம் என்ற விஷயம்தான் எனக்குப் புரியவில்லை. "மெட்ராஸ் ஸ்டேட்" என்ற பெயர் நெடுங்காலமாக இருந்து வரும் பெயராகும். இப்பொழுது புதிதாக வைத்த பெயரல்ல. அப்படிப் புதிதாக வைத்து அதிலே இவர்களுக்குத் துவேஷம் என்று சொன்னால் அர்த்தம் உண்டு. மேலும் அவர்கள் தமிழ் நாடு என்று பெயரை மாற்றி அமைக்காத காரணத்தினால் தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகிய நீலகிரியில் நடக்கும் சட்டசபைக் கூட்டத்தைப் பஹிஷ்கரிக்கப் போகிறோம் என்று பேசினார்கள். ஊட்டியில் சட்டசபையை நடத்துவது பற்றி கவர்னர் உரையில் ஒன்றும் இல்லாது இருந்தும்கூட அவர்கள் அவ்வாறு பேசினார்கள். நாங்களே ஊட்டியில் சட்டசபைக் கூட்டம் நடத்துவதை மாற்றிக்கொள்வதாக இருந்தது. ஆனால் இன்று மறுபடியும் போவது என்று தீர்மானித்துவிட்டார்கள். இவர்கள் இந்த மாதிரி ஒரு தீர்மானம் பண்ணினதின் காரணத்தினால் பயந்து போய் ஊட்டிக்குப் போகும் திட்டம் மாற்றிவிட்டார்கள் என்று சொல்லுவதற்கு இடம் வந்து விடக்கூடாது என்ற காரணத்தினால் தான் ஊட்டிக்குப் போகும் திட்டம் உறுதிப்படுத்தப்பட்டு விட்டது என்று நினைக்கிறேன். எனவே, இந்தக் காரணத்திற்காக அவர்கள் இங்கே கவர்னர் உரையில் கலந்து கொள்ளாமல் இருந்திருக்கவேண்டியதில்லை. நாளை அங்கே சபை நடக்கும் காலத்தில் அவர்கள் இதே கொள்கையைக் கடைப்பிடிக்காமல் புத்திசாலித்தனமாக நடந்துகொள்வார்கள் என்று நினைக்கிறேன். மேலும் அவர்கள் ஊட்டிக்குப் போகாமல் இருந்திருக்கிறார்களா என்றால் இல்லை. பல கமிட்டிகளில் அவர்கள் கட்சியைச் சேர்ந்து அங்கத்தினர்கள் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். அந்தக் கமிட்டி கூட்டங்கள் பல ஊட்டியில் நடக்கும் பொழுது அவர்கள் கலந்துகொண்டிருக்கிறார்கள். அதில் பங்கு எடுத்துக்கொண்ட அவர்கள் இந்தச் சபைக் கூட்டம் ஊட்டியில் நடக்கும் போது பஹிஷ்கரிப்போம் ; வரமாட்டோம் என்று சொல்கிற நிலைமைக்கு வரமாட்டார்கள் என்று நினைக்கிறேன். தீர்க்காலோசனை செய்து இந்தச் சபையின் கௌரவத்திற்கு இவ்வளவு காலமாக எவ்வாறு காரணமாக இருந்திருக்கிறார்களோ அதேபோல வரப்போகின்ற கட்டத்திலும் இந்தச் சபையின்

[Sri A. Vedarathnam] [6th February 1959

கௌரவத்தைக் காப்பாற்ற முன் வரவேண்டும், ஒத்துழைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அந்த கண்ணியத்தையும் நிலை நிறுத்துவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

அவர்களுடைய கட்சியின் சார்பில் கவர்னர் உரைபற்றி முதல் முதலாகப் பேசியவர் மிக முக்கிய விஷயமான நிலச்சீர்திருத்தத்தைப்பற்றிப் பேசுவார்கள் என்று எதிர்பார்த்தேன். இன்றைக்கு மிக முக்கியமாகக் குறிப்பிடக்கூடிய பிரச்னை எதுவெனில், இந்த நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டும் விஷயம்தான். மற்றவையெல்லாம் இந்த மாநிலத்தின் இதர அபிவிருத்திக்கு வசதியான விஷயங்களாக இருந்தாலும் இந்த உச்ச வரம்பு விஷயம் மிக முக்கியமானது. அதைப்பற்றி அவர்கள் கட்சியினுடைய கொள்கை என்னவென்று சொல்லவில்லை. 5 நிமிஷம் நம்முடைய துணைத் தலைவர் அவர்கள் அதிகப்படியான நேரம் கொடுத்தும் அவர்கள் அதை விட்டு விட்டார்கள். ஆயினும் அவருடைய கட்சியைச் சேர்ந்தவர்கள் அதைப்பற்றிப் பேசாமல் விட்டுவிடமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் கட்சி அங்கத்தினர்கள் பேசும்பொழுது இதைப்பற்றிய அவர்களுடைய கருத்தை விளக்குவார்களானால் மிக்கவும் சந்தோஷமாக இருக்கும் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

நாடு அதி வேகமாக முன்னேறிக்கொண்டிருக்கிறது. இந்த வேகத்தில் யாராவது ஒரு சாரார் நாட்டின் முன்னேற்ற வேகத்தைப் பின்பற்றிச் அதனுடன் செல்லத் தயங்குவார்களேயானால், அப்புறம் அவர்கள் "பஸ்ஸைத்" தவறிவிட்டவர்களாகவே ஆவார்கள். அடுத்தபடி அவர்களால் அதைப் பிடிக்க முடியாது.

**DEPUTY SPEAKER :** இன்னும் 2 நிமிஷத்தில் முடித்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்.

***SRI A. VEDARATHNAM :** இந்த நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் நம்முடன் இருந்து பணியாற்றியவர்கள், தொண்டாற்றியவர்கள், தியாகத்துக்கு ஆளானவர்கள் எல்லாம் இந்த நிலத்துக்கு உச்ச வரம்பு கட்டுவதனால் பாதிக்கப்படுபவர்களாக இருந்தும் கூட, இன்று நாடு போகும் வேகத்தில் இந்தச் சீர்திருத்தத்தைச் செய்யத் தவறினால், மகத்தான காரியத்தைச் செய்யத் தவறியவர்களாவோம் என்கிற தூரதிருஷ்டி உள்ளவர்கள் உணர்ந்த காரணத்தால்தான், இன்றைக்குக் காங்கிரஸ் மகா சபையானது இதைப் பற்றிய கொள்கையை அலசி அலசி ஆராய்ந்து முடிவெடுத்துள்ளது.

இந்த நாட்டிலிருக்கிற அத்தனை அரசியல் கக்ஷிகளும் உச்சவரம்புக்கு அதிகமுள்ள நிலத்தை நிலச்சுவான்தாருக்கு நஷ்ட ஈடுகொடுக்காமல் எடுத்துக்கொள்ளவேண்டும் என்கிற கொள்கையை உடையவர்கள்.

காங்கிரஸ்தான் தன்னுடைய அரசியல் சட்டத்தில் **No confiscation without equitable compensation** என்று தீர்மானித்திருக்கிறது. அதை ஒட்டியே நம் சர்க்கார் நியாயமான விலை கொடுத்துத்தான் உபரி நிலத்தை எடுத்துக்கொள்வார்கள். வேறு எந்த ஆட்சியிலும் நிலச்சுவான்தார்கள் இன்றுள்ள நிலையில் இதை எதிர்பார்க்க முடியாது. அவர்கள் ஜமீன்தார்களுக்கும் ராஜாக்களுக்கும் ஏன் நஷ்ட ஈடு கொடுத்தீர்கள் என்று இந்த சர்க்காரை இன்றும் கேட்கிறார்கள்.

10-50 a.m.

இந்நிலையில் இந்நாட்டிலுள்ள நிலச் சொந்தக்காரர்களும் இந்த நாட்டில் இருக்கிற அத்தனை அரசியல் கட்சிகளும் இந்தப் பிரச்னையை உன்னி உன்னிப் பார்த்து நல்லதொரு முடிவுக்கு வந்தாகவேண்டும். மற்ற இதர விஷயங்களில் இந்த மாநில சர்க்கார் எப்படி நல்ல முறையில் பல காரியங்களைச் செய்துவருகிறதோ அதுபோலவே நிலச்சீர்திருத்தம்

6th February 1959] [Sri A. Vedarathnam]

சம்பந்தமாகவும் நாம் நல்ல முறையில் முன்னேரியாகவேண்டும். கணிசமான முறையில்—நாடு சீர்கேட்டை அடையாதவாறு காப்பாற்றப்பட நமது சர்க்கார் நிலச்சீர்திருத்தம் சம்பந்தமாகவும் நல்லதொரு முடிவைக் காண வெண்டும் என்று வேண்டிக்கொள்கிற அளவில் என் உரையை முடித்துக் கொள்ள விரும்புகிறேன். முதலிலேயே நில உச்ச வரம்பு கொண்டுவந்திருந்தால் நிலச்சுவாந்தார்களுக்கு மிகவும் சௌகரியாமக இருந்திருககும. அது இல்லாத அளவில் முன்னதாக அக்ரிகல்சரல் இன்கம் டாக்ஸ் வந்திருக்கிறது. இதேநேரத்தில் தானியங்களின் விலையை நிர்ணயித்து சர்க்காரே கொள்முதல் செய்யும் திட்டம் வருகிறது. இவையெல்லாம் குறிப்பாக நிலச்சுவாந்தார்களை அதிகம் பாதிக்கப்போகிறது என்கிற அபிப்பிராயம் பரவி மக்களிடத்திலே—விவசாயப் பெருங்குடி மக்களிடத்திலே அதிருப்தியை அதிகம் விளைவித்து வருகிறது. இதைச் சர்க்கார் உணராமல் இருக்க முடியாது. ஆகவே சீக்கிரத்தில் உச்ச வரம்பு கட்டும் விஷயமாக சர்க்கார் நல்ல முடிவைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, கவர்னர் உறைக்கு ஸ்ரீமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் அவர்களால் பிரேரேபனை செய்யப்பட்ட நன்றி செலுத்தும் தீர்மானத்தை நான் முழுமனதுடன் ஆதரித்து முடித்துக் கொள்கிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI :** ஆன் எ பாயின்ட் ஆப் பர்சனல் எக்ஸ்ப்ளனேஷன். கனம் வேதரத்தினம் அவர்கள் என் பேச்சை சரிவரக் கேட்காமல் பேசியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். கவர்னர் உரையை நாங்கள் பகிஷ்காரம் செய்தது—எப்ரல் முதலில் ஊட்டியில் நடத்த இருக்கிற சட்டசபைக் கூட்டத்தைக் கண்டிப்பதற்காக என்று நான் சொல்லவில்லை. கவர்னர் வடநாட்டு ஆதிக்கத்தின் ஏஜண்டாக இங்கே உரை நடத்துகிற காரணத்தினால் அந்த உரையை நாங்கள் பகிஷ்காரம் செய்தோம் என்று சொன்னேன்.

* **Sri A. VEDARATHNAM :** ஊட்டிக்கு வரவேண்டுமானால் தமிழ் நாடு என்று பெயர் வைத்தால் வருவதாக கனம் அங்கத்தினர் அவர்களே குறிப்பிட்டார்கள். மாற்றுவிட்டால் தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகிய ஊட்டிக்கு வரமாட்டோம் என்பதாக அவர்கள் சொன்னதாக நினைத்து நான் பேசினேன். இப்போது வருகிறோம் என்றால் சரிதான்.

DEPUTY SPEAKER : I fix a time limit of 15 minutes for each member.

* Sri T. SAMPATH : Mr. Deputy Speaker, Sir, my respectful colleague Sri A. Vedarathnam Pillai so eloquently spoke in Tamil and I am afraid I cannot follow him in the same language. So, I crave the indulgence of the House to speak in English.

Sir, I have great pleasure in supporting the Motion of Thanks and in doing so, I desire to express my views on some of the matters referred to in the address of the Governor. The address is refreshingly brief and to the point. It has presented an impressive survey of the programme already undertaken by the Government and also proposed to be undertaken during the coming years. Just like last year, the Governor has stressed the need to preserve and develop the essentials of basic unity and solidarity for promoting the welfare of the people. What is now required is only solidarity and constructive approach to any problem. Only this aspect my colleague Sri A. Vedarathnam Pillai has stressed. Like basic unity, we want also rational unity and that alone, according to me, will enable us to make rapid progress.

[Sri V. Subbiah] [6th February 1959

நிலத்திற்கு உச்ச வரம்பு நிர்ணயிப்பதை வரவேற்கிறோம். அதை மறுக்கவில்லை. ஆனால், அதை நன்றாக யோசித்து, தீர்க்கமாக, அதில் இருக்கும் கஷ்டங்களை யெல்லாம் புரிந்து, சட்டம் செய்யவேண்டுமென்று சொல்கிறேன். எங்கள் கிராமத்திலேயே ஒரு ஏக்கர் ரூபாய் 5,000 விலை போகிறது, இன்னொரு நிலம் ரூபாய் 50-க்கும் போகிறது. நிலத்தின் தரம், மதிப்பு, உற்பத்தி முதலியவை நிலத்திற்கு நிலம் மாறுபட்டுக் கொண்டிருக்கும்.

நிலத்திற்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கும்போது, பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. நிலத்தை மட்டும் பகிர்ந்து கொடுத்துவிட்டால் போதாது. ஒருவனிடத்தில் நிலத்தை நாம் தாராளமாகக் கொடுத்துவிடலாம். அதை உழுது பண்படுத்தி, அதற்கு வேண்டிய விவசாயக் கருவிகளை வாங்கி, உரம், கலப்பை, வண்டி, மாடுகள் முதலியவைகளை வாங்குவதற்குப் பணம் அவன் கையிலே இருக்க வேண்டும் என்பதை யெல்லாம் கவனித்துச் சட்டம் செய்யவேண்டும். இன்றைக்கு தொழில் முதலாளிகள் பலர் பணத்தை குவித்துக் கொண்டு கோடீஸ்வரர்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய வருமானத்தைப் பற்றி என்ன செய்யப்போகிறார்கள் என்று நாட்டில் உள்ள பொருளாதார அறிஞர்கள், தொழில் விவசாய துறையில் அனுபவம் மிகுந்த பெரியவர்கள் பலர் கேட்கிறார்கள். இதையெல்லாம் நாம் கவனித்துப் பார்த்து, சரியானமுறையில் செயல்படவேண்டுமென்பது என்னுடைய ஆசை. அதைத் தெரிவித்தேன்.

விவசாயிகள் நல்ல முறையில் இயங்குவதற்கு விவசாய கூட்டுறவு பாங்குகள் அமைத்திருக்கிறார்கள். இருந்தாலும் அவை செயல்படுவதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும். எல்லாப் பகுதிகளிலும் அவைகளை நிறுவ வேண்டும்.

எண்ணாயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்திருக்கிறோம் என்று சொல்கிறார்கள். ஆனால், அதை வைத்துக்கொண்டு விவசாயிகள் எவ்வளவு அவஸ்தைப் படுகிறார்கள் என்பதையெல்லாம் புரிந்துகொள்ளவேண்டும். க்ரூப் ஸிஸ்டம் இன்றும் இருந்துகொண்டிருக்கிறது. கனம் மின்சார அமைச்சர் அவர்கள் ஏதோ செய்வதாகச் சொன்னார்கள். அதில் சில கஷ்டங்கள் இருக்கிறதென்று அவர்கள் குறிப்பிட்டார்கள். ஆனால், விவசாயியிகள் அதை 'மின்சார வெட்டு' என்று அர்த்தப்படுத்திக்கொள்கிறார்கள். காலையில் ஆரம்பித்தால் மின்சாரம் 12 மணிவரையில் ஓடுகிறது. 12 மணிக்கு ப்யூஸை கழட்டி விடுகிறார்கள். மறுபடியும் இரவில் பத்து மணிக்குத்தான் ப்யூஸைப் போடுகிறார்கள். அதனால் விவசாயம் பெரிய அளவில் பாதிக்கிறது. பகல் 12 மணிக்கு மின்சார சப்ளை எடுத்து விடுவதால் அன்று பூராவுக்குமே கூலி ஆட்கள் தங்களுடைய கூலியைக் கொடுத்துவிடவேண்டும் என்று சொல்லுகிறார்கள். இதனால் விவசாயிகள் பல கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். மின்சாரத்தை நிறுத்திவிடுவதால் தண்ணீர் பாய முடியாமல் பயிர்களும் வாடிப்போய்விடுகின்றன. அதனால் வெள்ளாமையும் பாதிக்கிறது. முழுக்கூலியும் கொடுக்க வேண்டியிருக்கிறது. நடவுப் பயிரும் கெட்டு விடுகிறது.

12 noon.

* **Sri M. P. PERIASAMI** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையில் பேசும்போது சில வார்த்தைகளைப் பேச ஆசைப்படுகிறேன். நமது சென்னை மாகாணத்தில் பிறந்த சத்தியமூர்த்தி அவர்கள் முன்னாடியே சில வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வந்திருந்தார். அதை நானும் கேட்டிருக்கிறேன். வட நாட்டில் ஓடக்கூடிய கங்கை நதியிலிருந்து வாய்க்கால் வெட்டி ஒவ்வொரு நதிக்கும் அதைக் கொண்டு வந்தால் தெற்கே தாம்பரபரணி நதிவரையில் கொண்டு வந்து நாட்டின் வளத்தைப் பெருக்கலாம் என்று சொல்லியிருக்கிறார். அப்படி வெட்டி சேர்த்துவிட்டால் நமது இந்தியாவை சுபிட்சமுள்ள நீர்வளமுள்ள பிரதேசமாக ஆக்கிவிடலாம் என்றும் சொல்லியிருக்கிறார். நாம் சுதந்திரம்

அடைந்து விட்டோம். அந்தக் காரியத்தை இப்பொழுது எடுத்துச் செய்தால் நமது இந்தியாவிலுள்ள ஜனங்கள் நல்ல முறையில் சுபிட்சமாக வாழ முடியும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நமது கவர்னர் உரையில் ஹரிஜனங்களைப்பற்றி ஒரு வார்த்தைகூட குறிப்பிடவில்லை. அப்படி இதற்கு முன்னதாக கூறுவது வழக்கம். அப்படிக் கூறி வந்து பல நன்மைகளை ஹரிஜனங்கள் அடைந்திருக்கிறார்கள். அதை யாரும் மறுக்க முடியாது. அதன் மூலம் ஹரிஜனங்கள் பல வழிகளில் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். அப்படியிருந்தும் சில கிராமங்களில் தீண்டாமை அப்படியேதான் இருந்து கொண்டிருக்கிறது. அதைப்போக்க எந்த வழியிலாவது அரசாங்கம் அவர்களுக்கு நல்ல முன்னேற்றத்தைக் கொண்டுவரவேண்டிய சூழ்நிலைக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்பதுதான் எங்களுடைய கருத்து.

ஹரிஜனங்களுக்கு சலுகைகள் காட்டுவது என்பது பத்து வருஷ திட்டமாக இருந்தது, இப்பொழுது இது முடியப்போகிறது. கூடிய சீக்கிரத்தில் அது முடிவடையப்போவதால் அந்தக் காலத்தை நீடித்து அதாவது தீண்டாமை ஒழியும் வரையில் அதை நீடித்துக்கொடுக்கவேண்டும் அல்லது இன்னும் இருபது வருஷ காலங்களுக்கு நீடித்துக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது என்னுடைய அபிப்பிராயம்.

நமது சென்னை மாகாணத்தில் கட்டப்பட்டிருக்கும் பல அணைக்கட்டுத் திட்டங்களினால் பல காடு மேடுகள் எல்லாம் இப்பொழுது தண்ணீர் பாயக் கூடிய நிலைமையில் இருக்கிறது. இதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். சுதந்திரம் அடைந்த பிறகு நமது அரசாங்கம் பல அணைக்கட்டுகளைக் கட்டி ஆவன செய்து கொண்டு வருகிறது. கோயம்பத்தூர் ஜில்லாவைப் பார்த்தால் முன்பு காடு மேடுகளாக இருந்த பிரதேசங்களெல்லாம் இன்றைக்கு தஞ்சையை விட வளமுள்ள பிரதேசமாக ஆகக் கூடிய நிலையில் வந்திருக்கிறது. தஞ்சையைப் பார்த்தால் அங்கு வடிகால் என்பதே கிடையாது. அந்தக் குறை கோயம்பத்தூர் ஜில்லாவில் இல்லை. இந்த ஜில்லாவில் வடிகால் வசதி இருப்பதால் நல்ல வளமுள்ள பிரதேசமாக ஆவதற்கு இடமிருக்கிறது. அந்த வசதி இருப்பதால் கழிவு தண்ணீர் எல்லாம் அந்தந்த ஏரிகளில் நிரம்பி அந்தந்தப் பிரதேசங்களுக்கு பாசன வசதி கொடுப்பதற்கு ஏதுவாக இருக்கிறது. அவைகளிலிருந்து வரக்கூடிய கழிவு நீரெல்லாம் அங்கங்குள்ள ஆறுகள் ஓடைகளின் வழியாகச் சென்று பல பிரதேசங்களுக்கு பாசன வசதி கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. மற்ற ஜில்லாக்களில் இல்லாத சௌகரியம் இந்த கோயம்பத்தூர் ஜில்லாவில் ஏற்பட்டிருக்கிறது. இன்னும் அதிகப்படியாக முப்பது கோடி ரூபாய் செலவு செய்து பரம்பிகுளம் போன்ற பல திட்டங்களை உருவாக்கிக் கொண்டு இருக்கிறார்கள்.

அதே மாதிரி சேலம் ஜில்லாவில் காவேரி பாயக்கூடிய நாமக்கல் தாலூக்காவில் கிட்டத்தட்ட ஒன்பதாயிரம் ஏக்கர் நிலம் சாகுபடியாகிறது. முன்னால் ஜேடர்பாளையம் என்ற இடத்தில் கொரம்பு சிஸ்டம் மூலமாக பாசனம் நடந்தது. தற்சமயம் கலிங்கி கட்டிவிட்டது. ஊஞ்சப்பாளையம் வாழவந்திக்குளம் எல்லைக்காட்டூர்தீத்தாப்பாளையம் வரையில் கால்வாய் வெட்டினால் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கு மேல் பாசன வசதி கிடைக்கும். இப்போது அங்கு கலிங்கி கட்டி தண்ணீர் போவதால் ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலம் சாகுபடி செய்வதற்கு சந்தர்ப்பம் இருக்கும். இதைப்பற்றி நான் பல தடவைகளில் எடுத்து கூறி இருக்கிறேன். இபொழுது இருக்கக்கூடிய நிலையில் 1,000 ஏக்கருக்கு மேல் பாயக்கூடிய நிலையில் இருக்கிறது. இது கனம் மராமத்து மந்திரி அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அவரையே நான் அங்கே கூட்டிக்கொண்டு போய் காண்பித்திருக்கிறேன்.

இதேமாதிரி மோகனூரிலும் கொரம்பு சிஸ்டம் இருக்கிறது. இங்கேயும் ஒரு அணையைக் கட்டுவதற்கு திட்டமிட்டால் இன்னும் அதிகமாக ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலம் சாகுபடிக்கு வரும். இங்கேதான் விலை

[Sri M. P. Periasami] [6th February 1959

உயர்ந்த பொருள்களாகிய கொடிக்கால், வாழை, கரும்பு முதலியவைகள் பயிராகின்றன. அவைகளுக்கு தண்ணீர் இல்லாத காரணத்தால் அவைகள் எல்லாம் திடீர் திடீர் என்று காய்ந்து போகின்றன். அதனால் லட்சக்கணக்கான ரூபாய் நஷ்டமாகப் போய்விடுகிறது. இதையும் அரசாங்கம் ஆலோசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே ஜேடர்பாளையம் வழியாக ஊஞ்சப்பாளையம் வரையில் சுமார் மூன்று அல்லது நான்கு மைலுக்கு வெட்டி விட்டால் இன்னும் அதிகப்படியாக ஆயிரம் எக்கருக்கு தண்ணீர் பாயும். இதை நம்முடைய மராமத்து மந்திரிக்கு நேரடியாகக் காண்பித்திருக்கிறோம். அவைகளைச் செய்ய எங்கள் ஜில்லாவிலுள்ள இஞ்சினியர்களுக்கு மனம்வரவில்லை. அவர்கள் மூலமாக ஜனங்கள் உதவிபெற முடியவில்லை. அவர்கள் உதவி செய்தால் எவ்வளவோ நலமாக இருக்கும்.

காவிரியில் தண்ணீர் பெருகும் காலத்தில் சுமார் 15 அல்லது 20 அடி உயரம் தண்ணீர் காவிரியில் போகும். அங்கு பாசன வசதி இல்லாமல் இருப்பதால் தண்ணீரில் பல பகுதி கடலில் போய்விடுகிறது. அதனால் மேட்டூர் கடைகால் வழியாக திருமணிமுத்தார்வரையில் வெட்டி விட்டால் அதிகப்படியான எக்கருக்கு தண்ணீர் பாய்ச்சலாம். பல ஏரிகள், கிணறுகள் தண்ணீர் நிறையும், கடலில் வீணாகப் போகக்கூடிய தண்ணீரைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஏகால்லி மலை பிரதேசத்தில் நீலகிரிமலைமாதிரி இருக்கிறது. கொல்லிமலையில் பல ஓடைகள் ஓடுகின்றன. ஆயிரக்கணக்கான ஜனங்கள் அங்கே வசிக்கிறார்கள். அங்கே அரப்பளீஸ்வர சுவாமி கோவில் இருக்கிறது. அங்கு 200 அல்லது 300 அடி உயரத்திலிருந்து நீர் விழ்ச்சி விழுகிறது. அதன் மூலம் மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கு தகுந்த வசதி இருக்கிறது. அங்கே இஞ்சினியர்கள் போய் மின்சார உற்பத்திக்கு வேண்டிய ஏற்பாடு செய்வதால் வடநாடு தென்னாடு என்ற பேச்சே இல்லாமல் போய்விடும்.

காவிரி ஆறு சேலம் ஜில்லாவின் வழியாகச் சென்றாலும் சேலம் ஜில்லாவிலுள்ள பிரதேசங்கள் அதனால் பயனடையவில்லை. ஆனால் சேலம் ஜில்லாவிலேயே அதிகமாகப் பாயக்கூடிய வசதி இருக்கிறது, தஞ்சை ஜில்லாவில் செலவாகாமல் கடலில் பாயக்கூடிய தண்ணீரை சேலத்திற்குக்கொடுத்தால் சேலம் ஜில்லாவிற்கு நல்ல வசதி ஏற்படும்.

நேற்று கனம் முத்தையா செட்டியார் அவர்கள் பேசும்போது கூட குறிப்பிட்டார், தஞ்சையில் அதிகமாக தண்ணீரை வயல்களில் தேக்கிவைக்கிறார்கள், அதனால் வெள்ளாமை பாதிக்கிறது என்றும், இரண்டு மூன்று நாட்களுக்கு தண்ணீர் விடாமல் இருந்தால் நல்ல வெள்ளாமை கிடைக்கும் என்றும். அதைப்போலவே அந்தத் தண்ணீரை எடுத்து சேலத்திற்குக் கொடுத்தால் சேலம் ஜில்லா நல்ல பயனை அடையும். அதிகமாக தண்ணீர் வரக்கூடிய காலத்தில் அதை எடுத்து சேலம் ஜில்லாவில் பாய்ச்சுவதற்கு அவர்களுக்கு உரிமை இருக்கிறது. இதுவரையில் அந்த வாய்ப்பு இல்லாமல் இருந்தது. இனிமேலாவது அந்த வாய்ப்பைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

காவேரியில் மோகனூரிலிருந்து குழாய் வழியாக குடி தண்ணீர் நாமக்கல்லுக்கும் ராசிபுரத்திற்கும் கொண்டுபோகவேண்டும். இதைப்பற்றி பல வருடங்களாக சொல்லிக்கொண்டுவருகிறேன். இனிமேலாவது அப்படிப்பட்ட வசதியைச் செய்து கொடுக்க முன் வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதற்குவேண்டிய முயற்சியும் எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்காக நாமக்கல் பஞ்சாயத்திலும் ராசிபுரம் முனிசிபாலிட்டியிலும் ரூபாய் சேர்த்துவைத்திருக்கிறார்கள். நமது மாகாணத்தில் எவ்வளவோ திட்டங்களை எடுத்து நடத்துகிறார்கள். அதைப்போலவே இதையும் எடுத்து நடத்தவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

6th February 1959] [Sri M. P. Periasami]

அதோடு கூட இந்த விவசாயிகளுக்கு நிலவரம்பு கட்டுகின்றோம் அந்த மாதிரி ஒரு வரம்பு கட்ட வேண்டியது அவசியம்தான். அதே போல் எல்லாத் துறைகளிலும் வருகின்ற பணத்தை, பஸ், வியாபாரம், மற்றப் பெரிய தொழில்களைச் செய்கின்றவர்களுக்கெல்லாம் " சீலிங்" கட்ட வேண்டுமாய்க் கூறி என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

12-10 p.m.

*SRIMATHI D. RAGUPATHI DEVI : மதிப்பிற்குரிய சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, 4-ம் தேதியன்று நம் கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய உரையை வரவேற்கிறேன். நம்முடைய பாரத நாட்டின் நோக்கங்கள், ஏனையோரிடமிருந்து கடன் வாங்கப்பட்டவையல்ல. கோடிக் கணக்கான இந்திய மக்களின் வாழ்வு வளமடைய வேண்டும் ஒற்றுமை உலவவேண்டும், அன்பு பெருகவேண்டும், வாழ்வில் இன்பம் பெருகவேண்டும் ஆகிய குறிக்கோள்களே ஆகும். நாம், அடிமை நாடு, விடுதலை பெற்ற நாடு, வேற்றுமை உள்ள நாடு, வேற்றுமை இல்லாத நாடு, பெரிய நாடு, சிறிய நாடு என்ற பேதமையோ பாராட்டுவது இல்லை. அனைத்து நாடுகளையும் பாரதம் தன் அன்புக்கரங்களால் அணைத்துக் கொள்கிறது. எல்லா நாடுகளும், மக்களும், நம்முடைய அன்பு, அணியில் கலக்க வேண்டுமென்பதே நம்முடைய குறிக்கோள். இம்மாதிரி உள் நாட்டிலும் நம்முடைய மக்கள் கடைப்பிடிக்க பல பண்புகள் உள்ளன. இதைத்தான் கவர்னர் பெருமான் அவர்கள் தம்முடைய உரையில் " விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை, சகிப்புத் தன்மை முதலிய இன்னும் பிற சிறிய பண்புகள்தான் குடி ஆட்சியின் வெற்றிக்கு மிகவும் இன்றியமையாதவை " என்ற வாசகத்தில் தெளிவுபடுத்தி இருக்கிறார்கள். இதை நாம் மனதில் வைத்துக்கொண்டு நடைமுறையில் கடைப்பிடிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

இந்த ஆண்டு விளைச்சல் ஓரளவு அதிகமாக இருந்தும் இன்று உணவுப் பொருள்களின் இந்நிலையால் ஏழை மக்களும் நடுத்தரக்குடும்பத்தாரும் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் ; விலை ஏறிக்கொண்டே போகின்றது. இந்த விலை ஏற்றத்திற்குக் காரணம் என்னவென்று ஆராய்வதற்காக தேசீய வளர்ச்சிக் கவுன்சிலை ஏற்படுத்தினார்கள். இதற்கான வழிவகைகள் என்னவென்று எடுத்துக் கூறும் காலத்தில், தேசீயக் கவுன்சிலானது அரசாங்கமே உணவு தானிய மொத்த வாணிபம் முழுவதையும் ஏற்று நடத்த வேண்டும் என்று ஆலோசனை கூறியது. அப்படிச் செய்தால்தான் நாட்டு மக்கள் உணவுப் பற்றுக்குறையின்றி இருப்பார்கள் என்று கூறினார்கள். ஆனால் எந்த ஒரு நல்ல காரியத்தை நடத்தும்போதும் பல இடையூறுகளும், இடைஞ்சல்களும் ஏற்பட்டு பின்னர் வெற்றி ஏற்படுவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். கவுன்சிலின் கொள்கையைக் காலப் போக்கில் மேற்கொள்வதற்கு அறிகுறியாக நம்முடைய அரசாங்கத்தார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். நம்முடைய அரசாங்கமானது அவசியமான காலங்களில் மக்களுக்கு வினியோகம் செய்வதற்காக 2 லட்சம் டன் அரிசியை நியாய விலைக் கடைகளின் மூலம் கொடுக்க முடிவு செய்திருப்பது நம் எல்லோருக்கும் மிகவும் ஆறுதல் அளிக்கக்கூடிய செய்தியாகும். எந்த ஒரு திட்டத்தையும் நாம் சரிவர நிறைவேற்ற வேண்டுமானால், உள்நாட்டு வசதிகள், வெளி நாட்டு நாணய வசதிகள், பொறுப்பை வகிப்பவர்களின் தகுதி, திறன், முதலியவைகள் நன்றாக, சிறந்த முறையில் கவனிக்கப்படவேண்டும். இவற்றில் அரசியலார் ஈடுபட்டிருக்கக் கூடிய காலத்தில், நம்மிடையே சிலர் பாரத தேசிய நலனை மறந்து, சில்லரைச் சச்சரவுகளில் ஈடுபட்டு வருகிறார்கள். அவர்கள் பல விதங்களில் தேசிய ஐக்கியத்தையும், நல்லுறவையும் கெடுத்துக் கொண்டு வருகிறார்கள். வீண் ஆர்ப்பாட்டங்களும் கிளர்ச்சிகளும் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. இந்த விதமான சூழ்நிலையிலும் நம்முடைய சென்னை மாகாண அரசாங்கத்தார் எல்லா விதமான எதிர்ப்புகளுக்கும் ஈடு கொடுத்துக்கொண்டு பல பெரிய திட்டங்களைச் சிறந்த முறையில் நிறைவேற்றிக் கொண்டு வருவதானது, அரசியலாருடையவும், அமைச்சர் குழுவினுடையவும் தளராத ஊக்கத்தையும் தன்னம்பிக்கையையும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. நாம் விடுதலைக்குப் போராடிய காலத்தில் பிரதிபலனை எதிர்பாராமல் போராட்டம் நடத்தப்பட்டது, எந்த மாகாணத்தைச்

[Srimathi D. Ragupathi Devi] [6th February 1959

சேர்ந்தவர்கள், எந்த ஜில்லாவைச் சேர்ந்தவர்கள், எந்த மொழியைப் பேசுகின்றவர்கள் என்ற பாகுபாடுகளின்றி ஒற்றுமையுடன் அன்று போராடினோம். சுதந்திரப் போராட்ட காலத்தில் இத்தகைய பாகுபாடுகளை யெல்லாம் நம் உள்ளத்திலே கொண்டிருந்திருப்போமேயானால், நாம் நிச்சயமாக விடுதலை பெற்றிருக்க முடியாது. பசியும் பட்டினியும் பாரதத்தின் தலைவாயிலைக் கூட எட்டாமல் இருக்க வேண்டுமானால், செல்வச் செழிப்பில் நம்முடைய நாடு மிதக்க வேண்டுமானால், அறிவுச் சுடரில் நம் மக்கள் முழுமையாகப் பெறவேண்டுமானால் நாம் ஒன்றுபட்டு உழைத்தால்தான் முடியும் என்று நான் இங்கு கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

விவசாய அபிவிருத்திக்கு மிகவும் பயன் தரத்தக்க பரம்பிக்குளம், ஆனைமலைப் பகுதிகளில் ஓடும் ஆறுகளின் தண்ணீரை நம்முடைய மாகாணத்திற்கும் உபயோகப்படுகின்ற அளவுக்கு கேரள சர்க்காரோடு ஒரு உடன்பாடு ஏற்பட்டிருப்பது மிகவும் பாராட்டுவதற்குரிய விஷயமாகும். குந்தாத் திட்டம் நிறைவேறி வருகிறது என்ற செய்தியும், பெரியாறு திட்டம் பல இடைஞ்சல்களுக்கு இடையே வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டு பெரும் அளவில் மின்சார சக்தி கிடைக்கக்கூடிய வாய்ப்பும் மகிழ்ச்சிக்குரிய செய்திகள் ஆகும்.

இன்று நம் முன்பு உள்ள சிறிய குழந்தைகள் எதிர்காலத்தின் இணையற்ற செல்வங்களாகும். இந்த இளம் சிறார்களின் கல்வி அபிவிருத்திக்குப் பல வழிகளில் கல்வித் திட்டங்களையும், பள்ளிகளையும், கல்லூரிகளையும் விஸ்தரிக்க வேண்டும். பாலர் வகுப்பு முதல் பட்டதாரி வகுப்பு வரை "இடம் இல்லை" என்ற பிரச்சனை வெகுவாக இருந்து வருகிறது. எதிர்காலத்தில் நாட்டை நல்ல முறையில் உருவாக்கப் போகும் சிற்பிகளாகிய இவர்களுடைய நலன்கள் குலைக்கப்படாமல் இவர்களுடைய அறிவை விருத்தி செய்கின்ற வகையில் கல்வியானது சிறந்த நிலையில் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். இன்று 11,000 தொடக்கப் பள்ளிகளில் ஏழைப் பிள்ளைகளுக்கு நடுப்பகல் உணவு அளிக்கும் திட்டமானது மகிழ்ச்சி தரக்கூடிய விஷயம். அரசாங்க ஊழியர்களுக்கு 5 ரூபாய் அதிகப்படுத்தி இருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது.

கடைசியாக நான், முக்கியமாக குறிப்பிடவிரும்புவது என்னுடைய தொகுதியைப்பற்றிச் சில செய்திகளாகும். என்னுடைய தொகுதியான மேட்டுப்பாளையம் தொகுதியானது மிகவும் வரண்ட பிரதேசம். பல ஆயிரக் கணக்கான நிலங்கள் வானம் பார்த்த பூமியாக இருக்கின்றன. கிணறுகள் வெட்டினாலும் அதிக ஆழத்தில்தான் தண்ணீர் கிடைக்கிறது. இந்தப் பிரதேசத்தைச் செழிப்புறச் செய்ய ஒரே வழிதான் இருக்கிறது. அதாவது குந்தாவில் இருந்து விடப்படும் கழிவு நீரை அவனாசி தாலுகா வழியாகப் பாய்ச்சுவதுதான் அந்த வழி. இதை அமைச்சர் அவர்கள் உட்பட பலரும் அறிந்திருக்கிறார்கள். இதை அமுலுக்குக் கொண்டு வரும்படியாக அமைச்சர் அவர்களைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இரண்டாவதாக மேட்டுப்பாளையமானது ஒரு சிறந்த முக்கியமான வியாபார ஸ்தலமாகும். பல ஆண்டுகளாக இங்கு ஒரு "ட்ரெஷரி" இல்லாத காரணத்தினால் மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பணத்தைக் கட்ட அவனாசிக்கோ அல்லது கோவைக்கோ செல்ல வேண்டியிருக்கிறது. அவனாசியில் இருக்கும் "ட்ரெஷரியை" மேட்டுப்பாளையத்திற்கு மாற்றப் போவதாகச் சொல்லப்படுகிறது. ஆனாலும் கால தாமதம் ஆகிக்கொண்டே வருகிறது. அமைச்சர் அவர்கள் இதில் உடனடியாகத் தலையிட்டு மேட்டுப்பாளையத்தில் ஒரு "ட்ரெஷரி" ஏற்படுத்திக் கொடுக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் மேட்டுப்பாளையம் தொகுதி எந்தவிதமான திட்டத்திலும் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. இந்தத் தொகுதியானது மிகவும் பிற்போக்கான பிரதேசமாக இருப்பதால், இந்தத் தொகுதியை உடனடியாக "ப்ளாக் டெவலப்மெண்ட் ஸ்கீமில்" சேர்த்துக்கொள்ளுமாறு என்னுடைய தொகுதி மக்கள் சார்பில் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

6th February 1959]

*DR. SRIMATHI SATYAVANIMUTHU : கனம் சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, கவர்னர் ஆற்றிய உரையிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக சில கருத்துக்களை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் தனது உரையை ஆற்றும் போது நாங்கள் இந்த மன்றத்திற்கு வராமல் இருந்ததற்குக் காரணம் என்ன என்பதை விளக்கமாக எடுத்துச் சொல்லியிருப்பினும் சட்ட மன்றம் உதகைக்குச் செல்ல இருக்கிற காரணத்தினால் நாங்கள் பங்குகொள்ள வில்லை என்ற தவறான கருத்தையே இன்னமும் பல உறுப்பினர்கள் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. கவர்னர் இங்கே வருவது அவர் முற்றிலும் நம்மை எல்லாம் அடிமையாக வைத்திருக்கிற வடநாட்டு ஆதிக்கக்காரர்களுக்கு, வடநாட்டு அதிகார தேவதைகளுக்கு தூதுவனாக என்றும் அவரை இங்கே இருப்பவர்கள் நல்ல தகுதியும் திறமையும் பெற்றவர்கள் நெஞ்சத் துணிவோடு நிலச் சட்டத்தைக் கொண்டு வரக் கூடிய ஆற்றல் நிரம்ப உடையவர்களாக இருந்தாலும் அந்த கவர்னருக்குப் பராக்குக் கூறி கவர்னர் வரும்போது பட்டுப் பாவாடை விரித்து பாதை அமைத்து கை கட்டி வாய் பொத்தி நின்று நாங்கள் என்ன செய்ய வேண்டும், கட்டளையிடுங்கள் காத்திருக்கிறோம் என அவர் வாய் ஆணைக்குக் காத்து இருப்பதும் எங்களால் காணமுடியாத காட்சி ஆகும். காண்பதனால் உண்டாகக்கூடிய வேதனையை விம்மலால் மறைத்துக் கொள்ளத்தான் இந்தக் காட்சியையே காணாமல் சென்றுவிடுகிறோம். அவர் கூறும் கட்டளைகள் இந்த நாட்டு மக்களுக்காக என்று சொல்லும்போது இந்த நாட்டு மக்களிடத்திலே அக்கறை கொண்டுள்ள நாங்கள் கவர்னர் அவர்கள் என்ன என்ன சொல்லாமல் விட்டிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்டவே அவர் உரை மீது எழும் விவாதத்தில் எங்கள் கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறோம்.

12-20 p.m.

கருத்து வேறுபாடுகள் எத்தனையோ இருந்தாலும் எல்லா அரசியல் கட்சிகளும் நல்ல முடிவையே ஒற்றுமையாக எடுத்திருப்பது பாராட்டக் கூடியது என்று கவர்னர் அவர்கள் கூறியிருக்கிறார். எடுக்கப்பட்ட முடிவுகள் ஒருமுகமாக எல்லாக் கட்சியினுடைய மனோபாவத்திற்கும் ஏற்ற வகையில் எடுக்கப்படவில்லை என்பதைத் தான் நாம் கவனித்து உணர வேண்டும். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே பெருவாரியாக இருக்கிற காரணத்தினால் அவர்கள் செய்துவிடுகிற முடிவுகள் அத்தனையும் நல்ல முடிவு என்று கொள்ள முடியாது. உதகையில் கூட்டம் நடத்துவது என்கிற முடிவை நாங்கள் எதிர்ப்பதிலிருந்தே எங்கள் கொள்கை புலப் படும். ஒவ்வொரு விஷயத்திலும் எவ்வளவு தூரம் நாங்கள் எதிர்க்க வேண்டுமோ அவ்வளவு தூரம் எதிர்க்கிறோம். உதகையில் கூட்டம் நடத்தக் கூடாது என்று சொல்கிற எங்கள் கருத்தைப் புறக்கணித்து தப்பித் தவறி வீம்புக்காக வேட்டையாடுவதாக நினைத்து விட்டுக்கொடுப்பதா என்று சென்றாலும் கூட அதை நாங்களும் இறுதிவரையில் எதிர்த்தே தீருவோம் என கூறிக் கொள்ளவிரும்புகிறோம். அதே போன்று நமது ஆட்சி மொழி இந்தியாக இருக்கக் கூடாதென்ற எதிர்ப்பை நாங்கள் காட்டினோம். சிறுபான்மையினராக நாங்கள் இருந்தாலும் அத்தனைபேரும் ஒன்றாக இருந்து இந்தி கூடாது என்று எதிர்த்தோம். எங்கள் எதிர்ப்பைப் புறக்கணித்து அவர்கள் காரியங்கள் செய்து கொண்டு போகிறார்களே தவிர அவர்கள் அவ்விஷயத்தில் எடுத்த முடிவு எப்படி அனைவரும் விரும்பும் முடிவாக இருக்கும் ?

அதேபோன்று அரசியலில் மாணவர்கள் சேரக்கூடாது, கலந்து கொள்ளக்கூடாது என்று கனம் சுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிட்டார்கள். எல்லாக் கட்சியும் இதன்பேரில் ஒன்றாகக் கூடி அந்த முடிவை ஒப்புக்கொண்டோம். அதன்பேரில் எங்கள் கட்சியின் சார்பாக அமைக்கப் பட்டிருந்த மாணவர் கழகம் கலைக்கப்பட்டது. ஆனால் இன்றும் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் ஆல் இண்டியா ஸ்டூடெண்ட் காங்கிரஸ் ஸ்தாபனத் தைக் கலைக்கவில்லை. அதன் சென்னை கிளை காங்கிரசின் தலைவராக இருக்கிற சட்டக்கல்லூரி மாணவர் அரசியல் கூட்டங்களுக்குத் தலைமை வகித்துப் பேசுகின்ற மேடையிலேயே கனம் சுப்பிரமணியம் அவர்களும் பேசி வருகிறார்கள். மாணவர்கள் அரசியலில் கலக்கக்கூடாது என்றுஅங்கே உபதேசம்

[Dr. Srimathi Satyavanimuthu] [6th February 1959

செய்யக் காணோம். ஆனால் எங்கள் கழகத்து அண்ணா அவர்கள் தமக்கு மாணவர்கள் சார்பாக வரவேற்பு அளிக்கப்படும்போதெல்லாம் மாண வர்கள் இவ்வாறு செய்யக்கூடாது என்கிற கருத்தை வலியுறுத்தியே வருகிறார்கள். இப்படி இந்தச் சட்டசபைக்குள்ளேயும், சட்டமன்றத்திற்கு வெளியே பொது மேடைகளிலும் நாங்கள் ஒரே கொள் கையைத்தான் கடைப்பிடித்து வருகிறோம். வற்புறுத்தி வருகிறோம். ஆளும் கட்சியைப் போல இங்கொன்றும் அங்கொன்றுமாகச் செய்ய வில்லை. உதாரணமாக இன்னொரு விஷயம். பஞ்சாயத்து சட்டத்தைப் பற்றி இங்கே விவாதித்த போது அமைச்சர் அவர்கள் நகர சபைத் தேர்தலில் கட்சியின் சார்பாகத் தேர்தல் நடப்பது நல்லது அல்ல என்றார்கள். ஆனால் இன்றைக்கு அந்தக் கட்சியில் தான் கட்சி சார்பாக ஆட்களைத் தேர்தலுக்கு போட்டியிடச் செய்கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தப்பான அபிப் பிராயத்தையே சொல்லிக்கொண்டு வருவதனால் நான் இடைமறிக்க வேண்டியிருக்கிறது. கிராமத்தில் இருக்கக்கூடிய சூழ்நிலை வேறு. நக ரத்தில் இருக்கக்கூடிய சூழ்நிலை வேறு. நகரத்தில் கட்சி அடிப்படையில் நாம் போட்டியிட்டாலும் கூடப் பரவாயில்லை. பஞ்சாயத்துகளுக்குத்தான் அது கூடாது என்று நான் குறிப்பிட்டேன். நான் சொன்னதை காங்கிரஸ் கட்சி எதிர்த்தும் நடந்தும் வருவது போல பேசிக் கொண்டே வருவது தவறு என்று இங்கே வலியுறுத்த விரும்புகிறேன்.

* DR. SRIMATHI SATYAVANIMUTHU : அமைச்சர் அவர்கள் அப்படிக் கூறுவாரானால் நான் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

கவர்னர் அவர்கள் உரையில் அறுவடை நமது ராஜ்யத்தில் பெருகி இருந்த போதிலும் உணவுப் பொருளின் விலை ஏற்றமாக இருந்து வருகிறது என்று சொல்கிறார். இதே முறையில் தான் கடந்த முறையிலும் அவர்கள் குறிப்பிட்டார்கள். அறுவடை அதிகமாகியிருந்தும் விளைபொருள் களின் விலை ஒரே ஏற்றமாக இருப்பது மிகமிக வருந்தத் தக்கது. விளைவு அதிகமாக இருந்தாலும் விளைபொருளைக் கொள்ள முடியாத அளவு விலை இருந்தால் பயன் இல்லை. ஆகவே விலை ஏற்றமாக இருந்தாலும் ஒன்றுதான். விளைச்சல் இல்லாமல் இருந்தாலும் ஒன்றுதான்.

அதற்குக் காரணத்தைச் சொல்கிற கவர்னர் அவர்கள் " இந்நெருக்கடி இந்தியா முழுவதையும் பொறுத்ததாக இருப்பதால் அந்த அடிப்படையில் அணுகினால்தான் இதனைச் சமாளிக்க முடியும் " என்று சொல்கிறார். இதையேதான் திராவிட முன்னேற்றக் கழகமும் சொல்கிறது. அகில இந்திய ரீதியில் குறைபாட்டை நீக்க முற்பட்டால் வேறு எதைச் சாதிக்க எண்ணினாலும் வெற்றி காண முடியாது. தென்னகம் தனித் திராவிட மாக இயங்கினால் ஒழிய இந்தப் பிரச்சனைக்கு விடுதலை காண முடியாது. பிரிந்தால்தான் யாரையும், யார் மனதையும் புண்படுத்தாமல் இதைத் தீர்க்க முடியும். அதனை இந்தச் சர்க்காரும் மறந்து நடக்கிறார்கள். அந்த அளவுக்குச் சொல்ல மனம் வரவில்லை.

மற்றொன்று அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகளின் வாயிலாகவும், கூட்டுறவு இயக்கங்கள் மூலமும் தானியத்தைக் கொள்முதல் செய்து அதனை நியாய விலைக் கடைகளின் மூலம் வழங்கப் போவதாகச் சொல்கிறார்கள். கொள் முதல் செய்வது, விநியோகம் செய்வது என்று வந்தால் அதில் எத்தனை சிக்கல்கள் உண்டாகும் என்று சொல்ல முடியாது. அவை நமக்குத் தெரியும். அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகள் என்று வரும்போது அந்த வியாபாரிகள் யார் ? சென்ற தேர்தலிலே தங்களுக்குச் சாதகமாக வேலை செய்தவர்கள் அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகளா ? தங்களுக்கு அதிகமாகப் பணம் கொடுத்தவர்கள் அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகளா ? என்று கேட் கப்படுகிறது—நான் சொல்லவில்லை—மக்கள் நினைக்கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : யார் விண்ணப்பம் போட்டாலும் லைசென்சு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒருவருக்காவது விண் ணப்பம் மறுக்கப்படவில்லை. இனியும் மறுக்கப்படாது.

6th February 1959]

* **Dr. Srimathi SATYAVANIMUTHU:** இப்படி உணவுப் பொருள்களின் விலை மட்டும் ஏகமாக ஏறிக் கொண்டு போகவில்லை. மக்களுக்கு அன்றாடத் தேவையான மண்ணெண்ணெய்க்கு இன்று சென்னை நகரத்திலும் இதர இடங்களிலும் வற்பட்டிருக்கிற நெருக்கடியைப்பற்றி விவாதிக்க ஒரு தீர்மானம் உரிமை கோரியிருப்பதாகத் தெரிகிறது. இப்படி மக்களது இருண்ட வாழ்வை ஒளியில் இருந்தாவது கழிக்கலாம் என்றால் வெளிச்சம்கூட இல்லாத நிலையில், ஒரு புட்டிக்கு பத்தணு என்ற நிலைமையில் சென்னை மக்கள் அல்லல்படு கிறார்கள். ஏழை எளிய மக்களுக்கு இப்படி அன்றாடத் தேவையாக இருக்கிறவற்றைக் கொடுக்க சர்க்கார் என்ன அக்கறை காட்டப்போகிறார்கள் என்பதைப் பற்றிக் குறிப்பிடப்படாமல் இருப்பது மிக்க வேதனை அளிப்பதாக இருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேரி அபிவிருத்தி என்று சொல்லி என் தொகுதியைச் சேர்ந்த வாழைமாநகரம், கிரேநகர் பள்ளம் ஆகிய இரண்டு இடங்களை எடுத்துக் கொண்டார்கள். இரண்டு ஆண்டு முடிந்துவிட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கும் தொடங்கிவிட்டார்கள். இன்னமும் ஒரு சேரி கூட அபிவிருத்தி அடைய வில்லை. எடுத்துக் கொண்டால் அந்தத் திட்டத்தைத் துரிதமாக முடிக்க வேண்டும். அதோடு தாழ்த்தப்பட்ட மக்களுடைய நிலைமை எடுத்துக் கொள்ளவேண்டும். தங்களுடைய குறைகளை எடுத்துரைப்பதற்காக இந்த சட்டமன்றத்தில் 35-க்கு அதிகப்படியான தாழ்த்தப்பட்ட உறுப்பினர்கள் இருந்தும் தீண்டாமையை ஒழிப்பதற்கான நல்ல வழிகளை செய்து தாழ்த்தப் பட்ட மக்களை முன்னேற்றத்திற்கு கொண்டுவருவதற்கான நல்ல கருத்துக் களை இந்த உரையிலே சொல்லவில்லை. கடந்த உரையிலும் இதைப் பற்றிச் சொல்லாமல் இருந்தது வேதனையாக இருக்கிறது. இந்த இரண் டாவது உரையிலே அவர்கள் மறந்து விட்டார்களோ அல்லது அரசாங் கத்திலே உள்ளவர்கள் அவர்கள் நினைவுபடுத்த தவறி விட்டார்களோ என்று நான் நினைக்கிறேன். அடுத்த ஆண்டு உரையிலாவது ஏதாவது இடம் பெறும் என எதிர் பார்க்கிறேன்.

12-30 p.m.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 398 கோடி ரூபாய் கேட் டிருக்க 152 கோடி ரூபாய் தான் பெற்று இருக்கிறது இந்த மாநில சர்க்கார். இந்த மாநில சர்க்கார் செய்திருக்கும் செலவினங்கள் இந்த ஆண்டோடு 90 கோடி ரூபாயாகும் என்று சொல்லப்படுகிறது. இவ் வளவு செலவு செய்தும் வாழ்வு முன்னேற்றம் அடைந்ததா என்று மக்களைக் கேட்டால் அவர்கள் இல்லை என்றுதான் பதில் சொல்லுவார்கள். எனவேதான் திராவிட முன்னேற்ற கழகத்தைச் சேர்ந்த நான் சொல்லு கிறேன் ஒதுக்குகின்ற கோடி கோடியான பணத்தை தேவையான சரியான திட்டத்திற்கு ஒதுக்கப்படவேண்டுமென்று.

(Srimathi Rajathi Kunchithapatham in the Chair.)

நெய்வேலி நிலக்கரி திட்டத்தை மிக மிக ஆராய்ந்து திட்டமிட்டதென்று, வட நாட்டில் இருக்கும் திட்டத்தைப்போல் தென்னகத்தில் இருக்கிறதா என் றால், இதோ ஒன்று இருக்கிறதென்று, சாம்பினுக்கு ஒரு திட்டம் என்று, அடிக்கடி சொல்லிக்கொள்ள ஒரு திட்டம் இருக்கிறது. இதில் கிடைக்கும் லாபம் பூராவும் வடக்கே செல்லுகிறது என்று எங்கள் கட்சி சொல்லும் போது அது அப்படி அல்ல என்று பதில் சொல்லப்படுகிறது. உண்மையில் அஸ்ஸாம் எண்ணெய்க் கிணறுகள் அஸ்ஸாம் மாநிலத்தாருக்கு உரிமையாக இருக்கிறது. அதேபோல் பஞ்சாபில் உள்ள பக்ரா நங்கல் மூலம் கிடைக்கும் லாபம் பூராவும் அந்த மாநிலத்தாருக்கு இருக்கிறது. அது போன்று ரூர்கேலா, பிலாய் போன்றவைகள் ஒரிஸ்ஸா மாநில அரசாங்கத்திற்கு முழுதும் சேருகின்றன. அந்தந்த மாநிலங்கள் என்று சொல்லும்போது வடநாட்டு மாநிலம் என்று சொல்லுகிறேன். அந்தந்த மாநிலங்களுக்கு இந்த வருமானம் செல்லுகிறதே தவிர டில்லிப் பேரரசுக்கு அல்ல. ஆகவே நெய்வேலி சுரங்க திட்டத்திலே கிடைக்கக்கூடிய வருமானம் பூராவும் மாநில சர்க்காருக்குச் சேரவேண்டுமென்று சொல்லும்போது, இதைப் புரிந்துகொள்ளாமல் ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் தவறாக சில கருத்துக்களை எங்கள் மீது சொல்லி, நாங்கள் ஏதோ தவறான புள்ளி விவரங்களைத் தருவதாக சொல்லுகிறார்கள். அவர்கள் கட்சியிலிருந்துதான் "கட்சி சார்பிலே வெளியிடப்படுகிற அறிக்கையிலிருந்தும், அரசாங்கம்

வெளியிடுகிற வெளியீடுகள் அறிக்கையிலிருந்தும் புள்ளிவிவரங்களை எடுத்துச் சொல்லுகிறோமே தவிர எங்களுக்கென்று தேவையான புள்ளி விவரங்களை நாங்கள் தயார் செய்துக் கொள்ளவில்லை. இந்த அடிப்படையிலேதான் நெய்வேலித் திட்டத்தை எடுத்துக்கொண்டதற்குப் பின்னால் ரூர்கேலா, பிலாய் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டு, முடிந்து இயங்க ஆரம்பித்திருக்கின்றன. ஆனால் அவைகளுக்கு முன்னால் ஆரம்பிக்கப் பட்ட நெய்வேலி நிலக்கரி சுரங்க திட்டம் இன்னும் பூர்த்தியாகாமல் தாமதப் பட்டுக்கொண்டிருக்கிறது. இது ஏன் என்று கேட்டால், ஜெர்மனியைக் கேட்டிருக்கிறோம், இன்னும் வேலைகள் நடந்துவருகின்றன என்று சொல்லுகிறார்கள். திட்டங்கள் இன்னும் காகிதத்திலே இருக்கின்றனவே தவிர இன்னும் செயல்படுத்தப்படவில்லை. இதை ஏன் சொல்லுகிறேன் என்றால் தென்னகத்திலே இருக்கிற திட்டம் எந்த அளவிலே மத்திய சர்க்காரால் புறக்கணிக்கப்படுகிறது என்பதை சுட்டிக்காட்டவேண்டும் என்பதற்காக. இவ்வளவு நல்ல கருத்துக்களை எடுத்துச்சொல்லுகிற எங்களைப் பார்த்து, வடக்கு தெற்கு என்று பேசத் தெரியுமே தவிர நீங்கள் இந்த நாட்டு மக்களுக்கு என்ன செய்துவிட்டீர்கள் என்று கேட்கிறார்கள். எல்லா உரிமைகளும் டில்லி ஆட்சியாளர் கையில் இருப்பதனால் நமது மாநில அமைச்சர்கள் எவ்வளவு திறமைசாலியாக இருந்தும் அவர்கள் செயல்படுத்த முடியாமல் இருக்கிறார்கள் என்பதை நாங்கள் சுட்டிக்காட்டுகிறோம். அதன் விளைவாகத்தான் வடநாட்டிலிருந்து கவர்னராக விஷ்ணுராம் மேதி வரும்போது, அந்த வருகையை நாங்கள் தட்டிக்கழித்தோம். அப்படி தட்டிக் கழிக்கும் நேரத்திலே எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த ஆசைத் தம்பி அவர்கள் பேசும்போது, 'எடின்பரோ கோமகனுக்கு வரவேற்பு அளித்தோம் அதை நீங்கள் ஆட்சேபிக்கவில்லை அப்படி ஏன் ஆட்சேபிக்கவில்லை ?' என்று ஆளும் கட்சியினர்கள் கேட்டார்கள். பிரின்ஸ் ஆப் வேல்ஸ், சைமன் கமிஷன் இந்த நாட்டிற்கு வந்தபோது அவர்கள் 'வெள்ளைக்காரர்கள், நம்மை அடிமைப்படுத்தி வந்திருக்கிறார்கள்' என்று காங்கிரஸ் கட்சியினர் அப்போது எதிர்த்தார்கள். அதேபோல்தான் இப்போது நண்பர் என்ற முறையில் வரவேற்கிறார்கள். இன்று கவர்னராக வந்து இங்கு கட்டளை இடுகிற நிலைமையிலே இந்தப் பதவி இருக்கும் காரணத்தினால்தான் நாங்கள் மதிப்பிற்குரிய விஷ்ணுராம்மேதி அவர்களின் வருகையை ஆட்சேபிக்கிறோம். ஆனால் திராவிடம் பிரிந்த பிறகு அவர்கள் இங்கு வரநேர்ந்தால் அவர்களைக் கட்டாயம் வரவேற்போம். அடிமைப் பட்டிருக்கிறோம் என்று சொல்வதனால் அவர்கள் இங்கு வரும்போது நாங்கள் வரவில்லையே தவிர ஊட்டிக்கு சட்டமன்றம் செல்கிறது என்பதற்காக அல்ல என்பதை மறு முறையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மக்களுக்குத் தேவையான சில மசோதாக்கள் கொண்டுவரப்படும் என்று சிலவற்றை கூறப்பட்டுள்ளது. ஆனால் நகரசபைப் பகுதியில் ஜாதி அடிப்படையில் ஓட்டல்களில் பெயர் வைப்பது கூடாது என்று தீர்மானம் நிறைவேற்றி சர்க்காரை அனுமதி கேட்டால் அமைச்சர் மாணிக்கவேலர் நகர சபைக்கு அந்த உரிமையில்லை என்றும் இங்கு விவாதம் நடந்தபோது அத்தகைய சட்டம் இங்கே நிறைவேற்றப்பட வேண்டுமென்று கனம் மாணிக்கவேலு அவர்கள் கூறி இருக்கிறார்கள். சட்டத்தினால் மட்டும் தீண்டாமை ஒழிப்பது என்பது முடியாது என்று கனம் அமைச்சர் சுப்ரமணியம் அவர்கள் குறுக்கிட்டு எடுத்துச்சொல்லி எல்லா அங்கத்தினர்களும் ஒன்றாகச் சேர்ந்து தீண்டாமையை ஒழிப்போம் என்று சொன்னார்கள். ஆனால் இதைக்குறித்து என்ன செய்யப்போகிறார்கள் என்பதை கவர்னர் அவர்கள் தங்களுடைய உரையில் சொல்லாமல் இருந்தது வருந்தத் தக்கது என்று சொல்லி என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Srimathi KOLANTHAI AMMAL** : தலைவி அவர்களே, மதிப்பிற்குரிய கவர்னர்பிரான் ஆற்றிய உரையை ஆதரித்துச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் அவர்களின் உரையிலே இன்று நம்முடைய நாடு முழுவதும் பேசப்படுகிற நிலவுடமைக்கு வரம்பு கட்டவேண்டும் என்பதை முழு ஆர்வத்தோடும் உற்சாகத்தோடும் பேசி சிறப்பாக நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்டி நாட்டிலே தரிசாக ஏராளமான

6th February 1959] [Srimathi Kolanthai Ammal]

நிலங்கள் உணவு உற்பத்தி பெருக்கத்திற்கு பேருதவியாக இருக்கும் என்ற கருத்தை உள் அடக்கி பேசியிருக்கிருர்கள். அதற்காக விவசாயப் பெருங்குடி மக்கள் சார்பாக எனது நன்றியையும், பாராட்டுதலேயும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக பிப்ரவரி, மார்ச், எப்ரல் மாதம் என்ருலே என் வட்டாரத்திலே இருக்கும் ஒவ்வொருவருக்கும் பெரும் வேதனையாக இருக்கும். காரணம் மின்சார விசை நின்றுவிடுமே என்ற அச்சத்தினுல்தான். ஆனல் இந்த ஆண்டிலே அப்படிப்பட்ட அச்சம் ஏற்படவில்லே. எனவே மின்சார இலாகாவைச் சேர்ந்த என்ஜீனியர்களுக்கும் மற்றும் அந்த இலாகாவைச் சேர்ந்த பல்வேறு உறுப்பினர்களுக்கும் கனம் அமைச்சர் அவர்களுக்கும் அத்தகைய ஒரு திட்டம் தீட்டி செயலாற்றியதற்காக எங்கள் நன்றி அறிதலேயும், பாராட்டுதலேயும் தெரிவித்துக்கொள்ளு கிறேன்.

வீதிகள் தோறும் இரண்டொரு பள்ளி என்று மகாகவி பாரதியார் பாடியிருக்கிருர்கள். கிராமங்களில் பாடசாலேக்கு வேண்டிய பொருள் களெல்லாம் அங்கே சென்று வேண்டிய அளவு நாங்கள் பெற்றுக் கொள்ளும்போது, கிராம மக்கள் தங்களுடைய குழந்தைகளின் கல்வி வளர்ச்சியில் அக்கறை காட்டி வருகிருர்கள் என்பது புலனுகிறது. சட்ட மன்றக் கல்விக் குழுவின் சிபார்சுகளே ஏற்று அவைகளே அரசாங்கம் செயல்படுத்தியும் வருகிறது. தொடக்கப்பள்ளிகளின் பாடதிட்டங்களே மாற்றி அமைக்கும் பணியும் ஏற்கெனவே தொடங்கிவிட்டது. கல்வி அமைச்சரும், கல்வி இலாகா டைரக்டர் அவர்களும், இன்னும் அதைச்சேர்ந்த பல்வேறு சிப்பந்திகளும் சேர்ந்து கொண்டுவந்திருக்கும் இந்தத் திட்டத்தை மிகவும் பாராட்டுகிறேன். இந்தத் திட்டம் கிராம மக்க ளின் கல்வி வளர்ச்சிக்காகவும், மக்களின் நன்மைக்காகவும் அமையும் என்பதை நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். பள்ளிச் சீரமைப்பு திட்டத்தினுல் பாடசாலேயில் ஏழை மாணவர்களுக்கு மத்தியான உணவு கொடுக்கும் வேலேயில் எல்லோரின் ஒத்துழைப்பிற்கும் இது ஒரு வாய்ப் பாக இருக்கிறது. பள்ளிகளின் வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாத இட வசதி துணேக் கருவிகள் முதலியவற்றை நல்கும் வகையில் பொது மக்களின் ஒத்துழைப்பைப் பெறுவதற்காக பள்ளிச் சீரமைப்புத் திட்டம் ஒன்றும் தொடங்கப்பட்டுள்ளது. இந்தத் திட்டத்தை மக்கள் மிகவும் உற்சாகத்துடன் வரவேற்பதனுல் இதற்கு என் பாராட்டுதலேத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

என்.ஜி.ஓ-க்களுக்கு கொடுக்கப்படும் ரூபாய் ஐந்து மிகவும் குறைவாக இருக்கிறது என்று எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் குறிப்பிட்டு இது மிகப் பெரிய பசி ஏற்படும் காலத்தில் ஏதாவது சிறு பண்டத்தைக் கொடுத்தால் அது எவ்வாறு இருக்குமோ அவ்வாறு இருக்கிறது என்று சொன்னுர்கள். இந்த நிவாரணத்துடன் இருந்துவிடாமல் அரசாங்கம் மேலும் அவர்களுக்கு சம்பள உயர்வு அளிப்பதற்கு ஒரு கமிஷன் ஏற்படுத்துவதன் மூலம் என்.ஜி.ஓ-க்களின் சம்பளத்தை உயர்த்துவதற்கான ஒரு வாய்ப்பை ஏற் படுத்துவார்கள் என்பதை இந்த உரையிலே நாம் காண்கிருேம் என்று இந்த இடத்திலே நான் ஞாபகமூட்ட விரும்புகிறேன்.

நமது கவர்னர் அவர்கள் உரையைப் பற்றி எதிர்க்கட்சியாக இயங்கிக் கொண்டிருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பல்வேறு விதமான குறைபாடுகளேக் குறிப்பிட்டார்கள். டில்லி ஏகாதிபத்தியத்திற்கு அடிபணிந்து நாங்கள் கவர்னர் வந்திருந்தபோது கைகட்டி வாய் பொத்தி நின்றதுபோல் இருந்தார்கள் என்ற முறையில் பேசியுள்ளார்கள். உண்மையிலே அன்றைய கூட்டத்தில் நடந்த செயல்களே அவர்கள் இங்கு வராமலே எப்படி பார்த்தார் கள்—ஒரு வேளே ஞானக் கண்கொண்டு பார்த்தார்களா ? கவர்னருக்கு பட்டு விரிக்கப்பட்டும், கைகட்டி வாய்பொத்தி நின்றதாகவும் குறிப்பிட்டு அதற்கு ஒரு உதாரணமும் எடுத்துச் சொன்னுர்கள். ஆங்கிலேயர்கள் உதகைக்குச் சென்ருல் புலி உதகைக்குச் சென்றது மாதிரி என்றும் காங்கிரஸ்காரர்கள்

12-40 p.m.

[Srimathi Kolanthai Ammal] [6th February 1959

உதகைக்குச் சென்றால் பூனை உதகைக்குப் போவது மாதிரி என்றும் அவர்கள் பேசியிருக்கிறார்கள். காங்கிரஸ்காரர்களாகிய நாங்கள் பூனைகள் அல்ல. நிச்சயமாக, ஒரு காலத்தில் நீங்கள் (திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள்) தான் ஆங்கிலேயர்களைப் பார்த்து அவர்கள் புலிகள் என்று கருதியிருப்பீர்கள். அவர்களை காங்கிரஸ்காரர்கள் புலிகளாகக் கருதியிருந்தால், பெரிய வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடி வெற்றிகொள்ள காங்கிரஸ்காரர்களால் முடிந்திருக்காது. எனவே, ஆங்கிலேயர்களைப் புலிகளாகக் கருதும் மனப்பான்மை திராவிட முன்னேற்றக் கழகத்தவர்களுக்குத்தான் இருக்கும் என்பதை இங்கே தெரிவித்துக்கொள்கிறேன். சட்ட சபைக் கூட்டம் உதகையில் நடந்தால் வீண் பணச் செலவு ஏற்படும் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் கூறுகிறார்கள். ' நீங்கள் மக்களுடைய பணத்தை வரியாக வாங்கி அதை இவ்வாறு செலவழிக்கிறீர்கள் ' என்று சர்க்காரைப் பார்த்து அவர்கள் சொல்கிறார்கள். அவர்களுக்கு நான் ஒரு விஷயத்தை உணர்த்த விரும்புகிறேன். நீங்கள் (தி.மு.க.-வினர்) சினிமாப் படங்களுக்குக் கட்டுரைகள் எழுதும்போது பிருந்தாவனத்தில் இருந்து எழுதிவிட்டு அக்கட்டுரைகளுக்கு 50,000—70,000 ரூபாய் பணம் வாங்குகிறீர்களே ! அந்தப் பணமெல்லாம் மக்களுடைய பணம் தானே ! உதகை ஒரு குளிர்ந்த பிரதேசம். அது 7,000 அடி உயரத்தில் இருக்கிறது. அது மலை வாசஸ்தலம். மனிதர்களாகப் பிறந்த எல்லோராலும் அந்த இடம் போற்றப்படுகிறது. மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் இட மாற்றத்தை விரும்புவது இயற்கை. மாணவர்கள் உல்லாசப் பிரயாணம் செல்கிறார்கள், ஒருசில நாட்களுக்கு. இரவு பகலாக உழைப்பவர்கள் உதகைக்கு ஒரு சில நாட்களுக்குச் செல்வதில் மனிதத் தன்மைக்குப் புறம்பானது எதுவும் இல்லை. குளிர்ந்த இடத்திற்குச் சென்று வாடாமல் இருக்க வேண்டுமென்று நாங்கள் நினைக்கவில்லை. தினந்தோறும் 20 மணி நேரம் உழைக்கும் உழைப்பாளி வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் நாங்கள் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டுதான் உதகைக்குச் செல்ல விரும்புகிறோம்.

" நாங்கள் காங்கிரஸ்காரனுடன் எவ்வளவு மாறுபட்ட மனப்பான்மை கொண்டிருந்தாலும் அவர்களிடம் பெருந்தன்மையோடு நடந்துகொண்டு எல்லாவற்றையும் சகித்துக்கொள்கிறோம். அதைத் தான் கவர்னர் அவர்கள் தமது உரையின் முடிவில் போற்றியிருக்கிறார்கள் " என்று திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் குறிப்பிட்டார். நிச்சயமாக, அவர்கள் அவ்வாறு நடந்துகொள்வதாக எங்களுக்குத் தெரியவில்லை. நேருஜீ அவர்கள் சென்னைக்கு வந்தபோது அவர்கள் அவ்வளவு நல்ல மாதிரியாக நடந்துகொண்டார்களா என்று அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். " இன்னுசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்து விடல் " என்பதற்கிணங்க பிறர் நல்ல விதமாக நடந்து கொள்ளாவிட்டாலும் அவர்கள் நல்ல விதமாக நடந்துகொண்டார்கள் என்றே சொல்லி அவர்களைப் பாராட்டுவது எங்கள் பரம்பரைக் குணம். அதனால்தான் கவர்னர் அவர்கள் தம் உரையை அவ்வாறு முடித்திருக்கிறார்கள். வீண் செலவு செய்ய வேண்டுமென்று சர்க்கார் கருதியிருப்பார்களானால், சட்ட சபைக் கூட்டத்தை 40 நாட்களும் உதகையிலேயே நடத்த வேண்டுமென்று தீர்மானித்திருப்பார்கள். உதகையைச் சேர்ந்த அங்கத்தினர்கள் சட்ட சபை அங்கே கூட வேண்டுமென்று மிகவும் வற்புறுத்துகிறார்கள். அது நல்ல வாசஸ்தலம். அதை உன்னத நிலைமையில் வைத்திருக்க வேண்டும்.

அடுத்தபடியாக, உணவுப் பொருள்களின் விலைவாசிகள் அதிகமாக உயர்ந்திருக்கின்றன என்று கவர்னர் பெருமான் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதைக் குறிப்பிட்டு எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், நன்றாக விளைந்து என்ன பிரயோஜனம் என்று கூறினார்கள். நன்றாக விளைந்தாலும் விளையாவிட்டாலும் உணவுப் பொருள்களின் விலைவாசிகள் உயர்ந்துவிடுகின்றன என்று அவர்கள் கூறினார்கள். விளைந்தும் விளையாததோடு ஒக்கும் என்ற கருத்துப்பட அவர்கள் பேசினார்கள். இந்த நேரத்தில் நம் மக்கள் கூட்டம் பெருகிவருவதை நாம் நினைவுறுத்திக் கொள்ளவேண்டும். அந்தக் காலத்தில் ரூபாய்க்கு 8 படி அரிசி விற்றது என்றால் அப்போது மக்கள் குறைவாக இருந்தார்கள். இப்போது மக்கள் அதிகமாக இருப்பதால் படி அரிசி ஒரு ரூபாய்-க்கு மேல் விற்கிறது.

6th February 1959] [Srimathi Kolanthai Ammal]

தம் உரையில் நல்ல பல கருத்துக்களைத் தெரிவித்ததற்காக கவர்னர் அவர்களுக்கு நாம் நன்றியும் பாராட்டுதலும் தெரிவிக்க வேண்டும். தென்னகத்தில் கட்டப்பட்டிருக்கும் அணைகளும் இங்கே செய்துகொடுக்கப்பட்டிருக்கும் நீர்ப்பாசன வசதிகளும் நமக்கே பயன்படுகின்றன ; அவைகளால் வடநாடு பயனடைவதில்லை. நாம் தான் உழைக்கிறோம். விளைவிக்கிறோம், உண்கிறோம். இதை இல்லை என்று சொல்ல முடியாது. வட நாட்டில் குறிப்பிட்ட சில மாநிலங்களில் பல ஆண்டுகளுக்கு முன்னர் ஏற்பட்ட முன்னேற்றத்தைக் குறிப்பிட்டு " வட நாடு வளர்கிறது, வட நாடு வளர்கிறது" என்று சொல்வது சரியல்ல. அவ்வாறு சொல்லி நம் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போடக் கூடாது. முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டுமென்று எதிர்க் கட்சி அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன். கவர்னர் அவர்கள் ஆற்றிய உரைக்கு பாராட்டுதல் தெரிவிக்க எனக்கு சந்தர்ப்பம் கொடுத்தமைக்கு கனம் சபா நாயகர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் தலைவி அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையைப்பாராட்டி சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நில உடமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்ற ஒரு நல்ல நோக்கம் அவருடைய உரையில் இடம் பெற்றிருக்கிறது. இது மிக நல்ல அம்சம். அந்த உச்ச வரம்பு ப்ளான்டேஷன்களுக்கு உண்டா இல்லையா என்று தெரியவில்லை. அதை ப்ளாண்டேஷன் பிரதேசங்களுக்கும் கொண்டுவர வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சர்க்காரிடமிருந்து நிதி உதவி பெறும் பள்ளிகளைப் பொறுத்த வரை, மாணவர்களிடமிருந்து சம்பளம் வாங்கும் பள்ளிகளுக்கு இனிமேல் நிதி உதவி அளிக்கப்படமாட்டாது என்று சர்க்கார் சொன்னால் அந்தப் பள்ளிகள் மிகவும் கஷ்டப்படும். சாதாரணமாக ஒரு ஆரம்பப் பாடசாலையை மாணவர்களிடமிருந்து சம்பளம் பெறாமல் சர்க்கார் மானியத்திலேயே நடத்துவதானால் மானியத்தைவிட 1,000 ரூபாய் அதிகமாகச் செலவு ஏற்படுகிறது என்று என்னிடமுள்ள புள்ளிவிவரங்களிலிருந்து தெரிகிறது. நானே ஒரு பள்ளிக்கூடம் நடத்துகிறேன். அந்தப் பள்ளிக் கூடத்தில் ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அதைச் சர்க்கார் மானியத்திலேயே நடத்தும்போது எனக்கு 1,000 ரூபாய் சொந்தச் செலவு ஏற்படுகிறது. இந்த நிலையில், சர்க்கார் நான் முன்பு கூறியதுபோல் முடிவு செய்தால், அதிகமான பள்ளிக்கூடங்களை நடத்துபவர்கள் அவைகளைத் தொடர்ந்து நடத்தமுடியுமா என்று சிந்திக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சட்ட சபைக் கூட்டத்தை உதகையில் நடத்த முடிவு செய்ததற்காக சர்க்காருக்கும், அதற்கு ஆதரவு கொடுத்த எல்லாக் கட்சிகளின் அங்கத்தினர்களுக்கும்—திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் நீங்கலாக—என் தொகுதி மக்களின் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் தாங்கள் அங்கே நடக்கும் சட்ட சபைக் கூட்டத்திற்கு வருவதாகக் கூறிய பிறகு அவர்களுக்கும் என் தொகுதி மக்களின் நன்றியைத் தெரிவிக்கிறேன். சட்ட சபைக் கூட்டத்தை உதகையில் நடத்தினால் சர்க்காருக்கு ரூ. 50,000 விரயம் ஏற்படும் என்று ஸ்ரீ ஆசைத்தம்பி கூறியது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. மக்களுடைய பணத்தை சர்க்கார் விரயம் செய்கிறார்கள் என்று அவர் சொன்னால் அது எப்படி சரியாகும் என்று எனக்குத் தெரியவில்லை. மக்களுடைய பணத்தை ஒரு மாநிலத்திலிருந்து கொண்டுபோய் இன்னொரு மாநிலத்தில் செலவு செய்கிறோமா ? மக்களுடைய பணத்தை எந்தச் சாக்கடையிலாவது போடுகிறோமா ? நீலகிரி ஜில்லா சென்னை மாநிலத்தின் ஒரு அங்கமாக இருக்கிறது. அப்படி இருக்க அங்கே செலவு செய்வதில் என்ன தவறு இருக்கிறது ? நீலகிரி மக்களும் இந்த சர்க்காருக்கு வரி செலுத்துகிறார்கள். அவர்கள் கொடுக்கும் வரிப் பணத்தை சென்னையிலுள்ள ஆயிரம்விளக்கு பகுதியில் செலவு செய்யலாம் என்றால், உதகையில் செலவு செய்வதில் என்ன தவறு இருக்கிறது என்று கேட்க விரும்புகிறேன்.

[Sri J. Matha Gowder] [6th February 1959

ஆசைதம்பி அவர்கள் சொல்கிறார், அங்கு கச்சா பிலிம் பாக்டரி ஏற்படுத்தலாமே என்று. பெரிய பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தலாமே, சர்க்கார் பெரிய பெரிய திட்டங்களை அங்கு போடட்டுமே, சட்டசபையை அங்கு நடத்தித்தான் அங்குள்ள மக்களுக்கு நல் வாழ்வு ஏற்படுத்தவேண்டுமா என்று சொல்கிறார். அதற்கு நான் ஒரு கதை சொல்ல விரும்புகிறேன். ஒருவன் தன் மகன் பசி பசி, என்று கேட்கும்போது அவனிடம் வீட்டிலிருந்து ஒரு ரொட்டித் துண்டைக் கொடுத்தான். கொடுத்து விட்டு பக்கத்திலுள்ள தன் தோட்டத்து மரத்தில் தேன் கூடு ஒன்று இருப்பதைக் கண்டு அதிலிருந்து தேனை எடுத்து பையனுக்கு கொடுக்க விரும்பி அந்த மரத்தில் ஏறினான். அப்பொழுது அவ்வழியே போய்க் கொண்டிருந்த ஒரு வழிப்போக்கன் அந்தப் பையனிடம் வந்து "தம்பி, தம்பி உன் தகப்பனார் அந்த மரத்தில் ஏறி உனக்கு தேன் எடுத்து தரப் போகிறார், அப்படி தேன் உனக்கு கிடைக்க இருக்கும்போது ஏன் ரொட்டித் துண்டை நீ சாப்பிடுகிறாய், ஒன்று அதை எனக்குக் கொடுத்து விடு அல்லது தூர வீசி எறிந்து விடு" என்று சொன்னானாம். அதைப் பார்த்த தகப்பனார் ஏதோ ஒரு திருடன் வந்து விட்டான், அவன் பையனின் கையிலுள்ள ரொட்டித் துண்டை பிடுங்கிக்கொண்டு விடப் போகிறான் என்று பயந்து மரத்திலிருந்து கீழே இறங்கி அந்த ரொட்டித்துண்டை பையன் சாப்பிட்டு முடித்த பின்னர் தேனை எடுக்க திரும்ப மரத்தில் ஏறினானாம், பையனுக்கு தேனை எடுத்துத் தருகிறேன் என்று சொல்லி. அதே போன்று சட்டசபை நீலகிரியில் நடந்தால்தான் அங்குள்ள மக்களுக்கு நல்வாழ்வு அளிக்க முடியுமா, அங்கு பெரிய பெரிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தி அங்குள்ள மக்களுக்கு நல்வாழ்வு அளிக்கலாமே என்று சொன்னார். முதலில் பையனைக் கொண்டு ரொட்டித் துண்டு சாப்பிடச் சொல்லிவிட்டு பிறகு தேனை எடுத்துக் கொடுக்கலாம் என்று எப்படி அந்தத் தகப்பனார் நினைத்தாரோ அதேபோல் முதலாவதாக நீலகிரியில் சட்டசபையை நடத்துவது என்று நீலகிரி மக்களின் தந்தையாகிய இவ்வரசாங்கம் நிச்சயித்திருக்கிறபோது அதை எதிர்க்கிறார்கள் திராவிட முன்னேற்ற கழகக் கட்சியினர், வழிபோக்கன் பையனிடமிருந்து ரொட்டிதுண்டை பிடுங்க நினைத்ததுபோல். அந்த ஜில்லாவிலுள்ள மக்களைப் பாதிக்கும் விதத்தில் அங்கு சட்டசபைக் கூட்டத்தை நடத்தக் கூடாது என்று சொல்லும் திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு அங்குள்ள மக்கள் பதில் சொல்லிக் கொள்வார்கள். அதற்கு அவர்கள் தயாராயிருக்கட்டும். அந்த ஜில்லாவில் தமிழர்களும் இருக்கிறார்கள் என்பதை நான் இங்கு ஞாபகப் படுத்த விரும்புகிறேன். தமிழ்நாடு என்று சென்னைக்கு பெயர் வைத்து விட்டால் நாங்கள் அங்கு வருகிறோம் என்று திராவிடமுன்னேற்றக் கழகத்தினர் சொல்கிறார்கள். அப்படிப் பார்க்கும்போது விரயம் என்ற பேச்சுக்கே இடமில்லாமல் போய் விடுகிறது. தமிழ் நாடு என்று பெயர் வைக்கட்டும், நாங்கள் அங்கு வருகிறோம் என்கிறார்கள். நாங்கள் சொல்வதை முதலில் சர்க்கார் கேட்கட்டும், பிறகு நாங்கள் வருகிறோம் என்று சொன்னால் விரயம் என்ற அடிப்படையில் அல்ல அவர்கள் அதை எதிர்க்கிறார்கள் என்று தெரிகிறது. சர்க்கார் துறையில் 50,000 ரூபாய் செலவு ஏற்படுமே என்று அவர் சொன்னார். இங்குள்ள சட்ட சபை அங்கு வரும்போது நமக்கு கிடைக்கும் படியிலிருந்து ஒரு பெரும் தொகை அங்குள்ள மக்களுக்கு கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. அடுத்தபடியாக இங்குள்ள செக்ரட்டேரியட் ஸ்டாப் அங்கு வரும்போது அவர்களுக்கு ஏற்படுகிற செலவு அங்குள்ள மக்களுக்குப் போகிறது. அதோடு இதர மாகாணங்களில் இருந்து சுமார் 20,000 பேர்கள் அங்கு வருவார்கள், அங்கு சட்டசபை நடக்கும், என்று அங்குள்ள மக்கள் எதிர்பார்க்கிறார்கள். சட்டசபை நீலகிரியில் நடக்கப் போகிறது என்று கேள்விப்பட்டு அங்கு வரத் தயாராயிருக்கிறார்கள் இதர மாகாணங்களில் உள்ளவர்கள். அப்படி எல்லாவற்றையும் பார்க்கும் போது சுமார் 6 லட்சத்தி ஐம்பாதினாயிரம் ரூபாய் அங்கே செலவு செய்யப்பட்டு அப்பணம் அங்குள்ள மக்களுக்கு பயன்படும். அதோடு இதர மாகாணங்களிலுள்ள பணம் நம் மாகாணத்திற்கு வருகிறது என்பதை எல்லோரும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டுமென்று எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். "திரும்பிப் பாருங்கள்" என்று ஆசைதம்பி அவர்கள் சொன்னார்கள். எதைத் திரும்பிப் பார்ப்பது? பழைய காலத்தில் வெள்ளைக்காரர்கள் நீலகிரிக்கு போகும்போது அதை

12-50 p.m.

6th February 1959] [Sri J. Matha Gowder]

காங்கிரஸ்காரர்கள் எதிர்த்தார்களே, அதை திரும்பி பாருங்கள் என்று சொல்கிறார். அப்பொழுது, பணம் விரயமாகிறது என்று சொல்லிவிட்டு இப்பொழுது அப்படி நீங்கள் விரயமாக்குகிறீர்களே, அதைத் தான் திரும்பிப் பாருங்கள் என்று சொன்னார். நாங்கள் திரும்பிப் பார்க்க வேண்டிய அவசியமில்லை. அன்று, அன்னிய ஆட்சியை எதிர்ப்பதற்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் அன்று காங்கிரஸ் கையாண்டது. 1957-ம் ஆண்டு ஜனவரி மாதம் நடந்த நிகழ்ச்சிகளை நீங்கள் திரும்பிப் பார்த்தாலே போதும். அன்று உங்கள் கட்சி நடத்திய போராட்டம் காரணமாக அரசாங்கத்திற்கு சொந்தமான பஸ்கள் எவ்வளவு கொளுத்தப்பட்டன ? அதனால் சர்க்காருக்கு எவ்வளவு நஷ்டம் ஏற்பட்டது என்பதை நீங்கள் திரும்பிப் பார்த்தால் போதும். உதகை மெம்பர் காவடி தூக்கினார் என்று கூறினார். ஆமாம், காவடி தூக்கினேன் என்பதனை நான் மறுக்கவில்லை. எல்லாக் கட்சி அங்கத்தினர்களிடமும் காவடி தூக்கிப் பார்த்தோம். எங்கள் மக்களின் புனர்வாழ்விற்காக எல்லோரும் உதவி செய்தார்கள். (Deputy Speaker in the chair). ஆனால் கருமியான திராவிட முன்னேற்ற கழகத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் ஒன்றுமே போடவில்லை. காவடி தூக்கிப் பார்த்தோம், ஆனால் அவர்கள் ஒன்றுமே போடவில்லை. ஒரு லைனில் பத்து வீடுகள் இருக்கின்றன. காவடி தூக்கினால் எல்லோரும் ஏதாவது கொடுப்பார்கள் என்று பார்த்தோம், ஒன்பது வீடுகளில் கிடைத்தது, ஆனால் ஒரு கருமியின் வீட்டில் மட்டும் கிடைக்க வில்லை. அதனால் எந்தவிதமான கேவலமும் எங்களுக்கு ஏற்பட வில்லை. எங்கள் மக்களின் நன்மைக்காகதான் அதைச் செய்தேன் என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். கடைசியாக அவர் ஒன்று சொன்னார், திராவிட நாடு வந்து விட்டால் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்து விடுமென்று. இம்மாநிலத்தில், என்.ஜி.ஓ. பிரச்னை போன்ற எல்லாப் பிரச்னைகளும் திராவிட நாடு வந்து விட்டால் தீர்ந்து விடுமென்று சொன்னார். ரோட்டில் ஒருவன் மருந்து விற்றுக் கொண்டிருந்தான். என்ன மருந்து என்று கேட்டபோது, அது ஒரு " சர்வரோக நிவாரணி " என்று சொல்லப் பட்டது. காய்ச்சலானும்ச ரி, தலைவலி என்றாலும் சரி, வயிற்று வலி என்றாலும் சரி எல்லா வியாதிகளுக்கும் அது கைகண்ட மருந்து என்று கூறினான். எல்லா வியாதிகளையும் தீர்க்கும் மருந்து என்றால், அந்த சகலரோக நிவாரணி மருந்து ஒருவனின் எல்லா ரோகங்களையும் போக்க வேண்டுமென்றால், அது அவன் மடிந்தால் தான் முடியும். அதே போன்று, திராவிட நாடு என்ற சகலரோக நிவாரணி மருந்தை சாப்பிட விரும்புபவர்கள் சாப்பிடட்டும், அது அவரவர்களைப் பொறுத்தது, என்னைப் பொறுத்ததல்ல. மக்களிடம் ஒன்றைப் பற்றி பலவிதமாகச் சொல்லி தங்கள் கட்சியை எப்படியாவது வளர்க்க வேண்டுமென்று நினைப்பது சரியல்ல. பொது மேடையில் பேசும்போது மக்களிடம் எதை வேண்டுமானாலும் பேசலாம். ஆனால் சட்ட மன்றத்தில் பேசும்போது சட்டமன்ற நடவடிக்கைகளை மக்கள் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பார்கள், சட்ட மன்றத்தில் என்னென்ன தீர்மானங்கள் வரப் போகின்றன, என்னென்ன சட்டங்கள் செய்யப் போகிறார்கள், சட்டமன்றத்தில் என்னென்ன நடக்கிறது என்று அறிய மக்கள் காத்துக் கொண்டிருக்கும்போது ஏதேதோ சொல்லிக் கொண்டு, கவர்னர் பெருமான் வடநாட்டான் என்ற காரணத்தினாலோ அல்லது வேறு காரணத்தினாலோ ஏதாவது பேசிக் கொண்டிருப்பதில் ஒரு பயனும் இல்லை என்று சொல்லிக் கொண்டு அடுத்த படியாக சட்டசபை நீலகிரியில் நடக்கும்போது நீங்கள் வருவீர்கள், மறுபடியும் நாங்கள் வர மாட்டோம் என்று நீங்கள் மட்டரகமாக போக மாட்டீர்கள்.

DEPUTY SPEAKER : The hon. Member should withdraw that word.

SRI A. GOVINDASAMY : On a point of order, Sir. The hon. Member should withdraw it.

DEPUTY SPEAKER : I have already asked the hon. Member to withdraw it.

[6th February 1959

**SRI J. MATHA GOWDER** : வேறு விதமாக......

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR** : On a point of order, Sir, மட்ட ரகம் என்ற வார்த்தையை இந்த சபையில் உபயோகிக்கக்கூடாதா ? அப்படி இங்கு உபயோகிக்கக்கூடாத வார்த்தையா அது ? இதுவரையில் அப்படி அந்த வார்த்தை இங்கு உபயோகப்படுத்தப்படவில்லையா?

**DEPUTY SPEAKER** : அந்த பதத்தை உபயோகப்படுத்தக் கூடாது. 'எதிர்க்கட்சியினரை மட்டரகம் என்று சொல்வது தவறு.

He must withdraw it. That is my ruling.

He has already exceeded the time-limit.

**SRI J. MATHA GOWDER** : அடுத்த படியாக, நீலகிரிக்கு போவதை விட இந்த சேம்பரையே "Air condition" செய்து விடலாம் என்று சொன்னார்.

**DEPUTY SPEAKER** : The hon. Member should at least express regret.

**SRI J. MATHA GOWDER** : Yes, Sir. I express my regret.

அப்படி Air condition செய்வது மட்டும் விரயமல்லவா ? ஊட்டிக்கு உல்லாசப் பிரயாணம் போகிறார்கள் என்று சொல்லிவிட்டு, இதை Air condition செய்து இங்கு உல்லாசமாக இருப்பது மட்டும் உல்லாசமல்லவா என்பதை அவர் மறந்து விட்டார். ஒரு ஜில்லாவிலுள்ள மக்களின் நன்மையைக் கருதி மாத்திரம் அங்கு போகிறோமே தவிர உல்லாசப் பிரயாணம் செய்வதற்காகவல்ல என்று சொல்லிக் கொண்டு எனக்கு பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, கவர்னர் பெருமான் அவர்களது உரையை ஆதரித்து என் ஜில்லா மக்கள் சார்பில் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

1 p.m.

* **SRIMATHI T. N. ANANDANAYAKI** : Sir, I want a ruling from you. கனம் அங்கத்தினர் அவர்கள் பேசும்போது குறிப்பிட்ட சகலரோக நிவாரணி மருந்து ஹோமியோபதி மருத்துவ முறையைச் சேர்ந்ததா அல்லது அலோபதி மருத்துவ முறையைச் சேர்ந்ததா என்பதை அறிய விரும்புகிறேன்.

**DEPUTY SPEAKER** : How can I give a ruling?

**SRI S. RAMASAMI THEVAR** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சென்ற ஆண்டில் கவர்னர் பெருமான் உரை விவாதத்திற்கு வந்தபோது இலங்கையில் வாழும் தமிழர்களைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை என்பதை எடுத்துச்சொன்னேன். இந்த ஆண்டிலும் அதைப்பற்றி குறிப்பிடவில்லை என்பதைப் பார்த்து முகவும் வருந்த வேண்டியிருக்கிறது. இலங்கையில் வாழும் கிட்டதட்ட 10 லட்சம் தமிழ் மக்கள் பெரும் அவதிக்குள்ளாகியிருக்கின்றனர். இந்த ஒரு ஆண்டுக்குள்ளாக, அதாவது 1958-வது ஆண்டில் மே மாதத்தில் கலவரம் நடந்தது. அந்த கலவரத்தின் போது நான் அங்கிருந்தேன். கொள்ளை, கொலை, தீவைத்தல் இவை எல்லாம் நடந்தன. இன்னும் காயம் பட்டு உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கும் நேரத்தில் தாகத்திற்கு தண்ணீர் கேட்ட ஒருவரின் வாயில் பெட்ரோலை ஊற்றி தீ வைத்தார்கள். அது மட்டுமல்ல, இன்னொருவரின் தலையில் ஒரு காலன் பெட்ரோலை ஊற்றி தீ வைக்கப் பட்டது. இப்படிப்பட்ட கொடுமைகள் எல்லாம் அங்கு நடந்தன. இம்மாதிரி நடந்த கலவரத்ததின் உச்ச நிலையின் போது நான் கம்பளை என்ற ரயில்வே நிலையத்தில் சரண் புக நேர்ந்தது. இம்மாதிரி அங்குள்ள கஷ்டங்களை எல்லாம் அனுபவித்து வரும் மக்களுக்கு ஆறுதல் சொல்லும் வகையில் ஒரு வார்த்தைகூட இந்த உரையில் குறிப்பிடவில்லை. அங்குள்ள மக்கள் என்ன செய்தார்கள் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அங்குள்ள மக்கள் அதிலும் குறிப்பாக அங்கு வாழ்கின்ற தமிழர்கள்

6th February 1959] [Sri S. Ramasami Thevar]

நம்முடைய தேச விடுதலைக்காக உதவி செய்தவர்கள். அந்த நாட்டின் வளத்தைப் பெருக்குவதற்காக அவர்கள் எவ்வளவோ வேலை செய்திருக் கிறார்கள். இன்று அவர்கள் விரட்டியடிக்கப் படுகிறார்கள். அம்மாதிரி அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் மக்களுக்கு ஆறுதலளிக்கும் வகையில் ஒரு வார்த்தைக்கூட இதில் சொல்லப்படவில்லை. அது மாத்திரமல்ல. நமது சர்க்கார் இதுபற்றி ஒரு விதமான நடவடிக்கையும் எடுக்காமல் இருப்பது அவர்களுக்கு இந்த சர்க்கார் துரோகம் செய்வதாகும். இதைப்போன்று துரோகம் வேறு எங்கும் கிடையாது என்பதை நான் கடுமையாக சொல்லிக் கொள்கிறேன். 1940-ல் நமது பிரதமர் நேரு இந்திய சர்க்காரின் தூதுவராக சென்றிருந்தார். அப்போது " இலங்கையில் வாழும் இந்தி யருக்கு ரோம அளவிற்கு ஏதாவது தீங்கு நேரிட்டால் கூட அதை நான் சகித்துக்கொண்டிருக்க மாட்டேன் " என்று உறுதி கூறினர். அதைக் கேட்டு அன்றையதினம் அங்குள்ள இந்தியர்கள் எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆனால் இன்று அங்குள்ள மக்களுக்கு எவ்வளவோ தீங்கு இழைக்கப்படுகின்றது. பொதுவாக அங்கு இந்திய மக்கள் எல்லாம் கூலிகளாக வாழ்ந்து வருகின்றனர். கிட்டத்தட்ட 8 லட்சம் மக்களும் தேயிலைத் தோட்டங்களில் கூலிகளாக வேலை செய்து வாழ்கின்றனர். அவர்களுக்கு அதைத் தவிர வேறு ஒரு கதியும் கிடையாது. அவர்களை எல்லாம் இந்த சர்க்கார்தான் அனுப்பி வைத்திருக்கிறது. 1940-க்கு பிறகு உடல் உழைப்புக்காக இந்தியாவிலிருந்து யாரையும் அனுப்புவ தில்லை என்று நேரு கமிஷன் கூறிற்று. ஆனால் அந்த அரசாங்கமோ யுத்த காலத்தில் அங்குள்ள தொழிலுக்கு ஆள் இல்லாமல் இங்குள்ள வர்களை கள்ள வழியிலும், வேறு விதமான வழியிலும் அழைத்துக் கொண்டிருக்கிறார்கள். உடலுழைப்புக்கு என்று இல்லாமல் வேறு வேலைக்கு என்று அழைத்துக் கொண்டுபோய் அங்கு வேறு வேலை கொடுக்காததின் காரணமாக தேயிலைத் தோட்டங்களில் கூலிகளாக வேலை செய்து வருகின்றதை நாம் காணுகின்றோம். பலரும் சொந்த வேலை களுக்காக இந்தியர்களை அமர்த்தியிருக்கிறார்கள். இது போது 1936-ம் ஆண்டில் பல இந்தியர்களுக்கு அங்கு வோட்டுரிமை அளிக்கப்பட்டது. வெள்ளையர்கள் ஆண்டு கொண்டிருந்த காலத்தில் கூட வோட்டுரிமையும் பிரஜாவுரிமையும் அளிக்கப்பட்டிருந்தது. ஆனால் இப்போது அந்த வோட்டுரிமையும் பிரஜாவுரிமையும் கிடையாது. பத்து, பன்னிரண்டு வருடங்களாக அவர்கள் இந்தத் தொல்லைகளுக்கு ஆளாகிக் கொண்டிருக் கிறார்கள். நாம் அதைப்பற்றி தட்டிக்கேட்பதில்லை. சாதாரணமான பிரஜா வுரிமை கூட கொடுக்கப்படுவதில்லை. நாம் காமன்வெல்த் உறவில் இருக்கிறோம் என்று பெருமைப்பட்டுக்கொள்கின்றோம். இலங்கையும் காமன்வெல்த்தில் அங்கம் வகிக்கிறது. ஆனால் இந்திய சர்க்கார் இந்தியர்களைப்பற்றி அதிலும் தமிழ் மக்களுக்கு அங்கு ஏற்படும் கஷ்டங் களைப்பற்றி ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. அங்கு வம்சாவழியினராக இருக் கும் பலருக்கும் பிரஜா வுரிமை கொடுக்கப்படவில்லை. இதில் இந்திய சர்க்கார் மறைமுகமாக கவனியாமல் இருந்தாலும்கூட நமது சர்க்கார் நிச்சயமாக இதில் அக்கரை காட்ட வேண்டும். காரணம் தமிழர்களிடத்தில் அக்கரை காட்ட வேண்டிய பொறுப்பு நமக்கிருக்கிறது. அதற்காக நாம் மத்திய சர்க்காரை வற்புறுத்த வேண்டும். மத்திய சர்க்காருக்கு நாம் இதைப் பற்றி எடுத்துச்சொன்னால்தான் அவர்களும் இதைப்பற்றி ஓரளவு உணருவார்கள். பலர் கொடுமைக்கு ஆளாகி வருவது மட்டுமல்ல, அவர்களுக்கு இங்கு சொந்த நிலங்களும் தொடர்பும் இருக்கின்றன. அவர்களுக்கு பலவிதமான தொடர்பு இங்கு இருந்தும் கூட இங்கு அவர்களுக்கு சான்று கிடைப்பதில்லை. நமது சர்க்கார் பல தடைகளை விதிக்கின்றன. அதோடு அவர்கள் கொண்டுவரக்கூடிய பொருள் களுக்கு தனுஷ்கோடியில் அதிகமான சுங்க வரிகள் போடப்படுகின்றன. ஆகவே இந்த சுங்க வரிகள் நீக்கப்படவேண்டும். அது மாத்திரமல்ல, ரொக்கம் பணமாக கொண்டு வந்தால் அதற்கும் இங்கு வருமான வரி யிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும். இம்மாதிரியான உதவி கள் அவர்களுக்கு செய்து கொடுக்க வேண்டும். இதற்கு நாம் மத்திய சர்க்காரை வற்புறுத்த வேண்டும். நாம் இதில் ஏனோதானோ என்று இருக்காமல் உடனடியாக இந்தக் கஷ்டங்களை யெல்லாம் அகற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று இந்த சர்க்காரை

[Sri S. Ramasami Thevar] [6th February 1959

கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக அங்குள்ள இந்தியர்கள் பல காலமாக ஒரு தமிழரை ஹைகமிஷனராக நியமிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தும் அதைப்பற்றி இதுவரையிலும் கவனித்ததாகத் தெரியவில்லை. நியமிக்கப்படும் ஹைகமிஷனர் வேறு மொழி பேசுபவராக இருந்தாலும்கூட தமிழ் தெரிந்த ஒருவரை நியமிக்க வேண்டும். ஏனென்றால் இன்று அங்கு இந்தியர்களாக இருப்பவர்களில் 100-க்கு 99 பேரும் தமிழர்களாக இருக்கிறார்கள். ஆகவே தமிழ் தெரிந்த ஒருவரை ஹை கமிஷனராக நியமிக்கவேண்டும்......

**DEPUTY SPEAKER :** ஹைகமிஷனரை நியமிக்கும் விஷயம் மத்திய சர்க்காரைச் சேர்ந்தது. இந்த சர்க்காருக்கு அதில் எந்தவிதமான அதிகாரமும் கிடையாது. ஆகவே சம்பந்தமில்லாத விஷயத்தைப் பேசுவதில் பிரயோஜனமில்லை என்று நினைக்கிறேன்.

**SRI S. RAMASWAMI THEVAR :** நமது சர்க்காருக்கு அதிகாரம் இல்லாவிட்டாலும் இதைப்பற்றி மத்திய சர்க்காரிடம் வற்புறுத்த வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் இதைக் குறிப்பிடுகிறேன். மேலும் நமது கவர்னர் பெருமான் உரையில் உணவு நிலையைப்பற்றி குறிப்பிடும்போது உணவு நிலையைக் கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப் பட்டிருப்பதாகத் தெரிவித்திருக்கிறார்கள். இன்றைக்கு ஏதோ தான்யங்களின் விலை மட்டும் கட்டுப்படுத்தப்பட்டிருக்கின்றதே தவிர மற்ற பண்டங்களின் விலை எல்லாம் விஷம்போல் ஏறிக்கொண்டேயிருக்கிறது. மற்ற பண்டங்களின் விலைகளையும் கட்டுப்படுத்தாவிட்டால் மக்களுடைய வாழ்வு பெரும் கஷ்டத்தில் போய்முடியும் என்பதை நான் இச்சந்தர்ப்பத்தில் எச்சரிக்க விரும்புகிறேன். மேலும் உச்சவரம்பு கட்டப் போவதாக சொல்லப்பட்டு வருகிறது. இவ்விதம் பேச்சு மாத்திரம் இருந்துகொண்டு வருவதால் உற்பத்தி நிலை மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. பெரிய நிலப் பிரபுக்கள் எல்லாம் தங்கள் நிலம் எல்லாம் வெளியில்தானே போகப் போகிறது என்ற நினைப்பில் உணவு உற்பத்தியில் அதிகமாக கவனம் செலுத்தாமல் இருந்து வருகிறார்கள். அதே போன்றுதான் தொழிலாளிகளும் அதிக கவனம் செலுத்தாமல் இருந்து வருகிறார்கள். இந்த நிலைமை இருந்து கொண்டிருக்குமானால் உணவு உற்பத்தி மிகவும் பாதிக்கப்படும். ஆகவே உச்சவரம்பு கட்டுவதைப்பற்றி உடனடியாக முடிவு எடுத்து அதை நடைமுறைக்கு கொண்டுவரவேண்டும். இதில் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படலாம். அதையெல்லாம் நீக்கிவிட்டு உடனடியாக உச்சவரம்பு கட்டுவதற்கு வேண்டிய முயற்சி எடுக்க வேண்டும் என்று இந்த சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

1-10 p.m.

* **SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM :** சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, நமது கவர்னர் பெருமானுடைய உரைக்கு நன்றி தெரிவிக்கும் பிரேரணையை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் அவர்கள் உரையிலே, எல்லாக் கட்சியினரும் ஒன்று பட்டிருக்கவேண்டும், எல்லோரும் வேறுபட்ட கருத்தினர்களாக இருந்தாலும் ஒன்று பட்டால்தான் நமது நாட்டிலே ஒரு நல்ல நிலைமையை உண்டாக்க முடியும் என்று தனது அன்புக் கரங்களால் எல்லாக் கட்சியினரையும் ஒருங்கே அணைத்துக்கொண்டு செல்ல முயற்சித்திருப்பதானது பெருமை படத்தக்க விஷயம். நமது அரசியல் கட்சிகளிலே ஒரு கட்சியினர் சில இடங்களில் பண்புடன் நடந்து கொண்டாலும்—சில இடங்களில் பண்பில்லாமல் நடந்து கொண்டபோதிலும் கூட—கவர்னர் பெருமான் எல்லோரையும் ஒருங்கே அணைத்துக் கொண்டு செல்லவேண்டும் என்ற நோக்கத்தோடு எல்லாக் கட்சியினரையும் இணைத்திருப்பதானது அவருடைய உயர்ந்த நோக்கத்தைக் காட்டுவதாக இருக்கின்றது. அதற்காக கவர்னர் பெருமான் அவர்களைப் பாராட்டத்தான் வேண்டியிருக்கின்றது.

அடுத்தபடியாக இந்த உரையிலே உப்பு-சப்பு இல்லை, காரம் இல்லை, என்றெல்லாம் வாதிக்கப்பட்டன. உண்மையிலேயே நம் நெஞ்சிலேயே கை வைத்துப் பார்ப்போமானால், சுதந்திரம் பெற்ற பிறகு நமது நாட்டில்

6th February 1959] [Srimathi P. K. R. Lakshmikantham]

எல்லா விதத்திலும்—எல்லாத் துறைகளிலும்—முன்னேற்றம் அடைய வில்லையா என்பது தெரியுமே தவிர, வாய் விட்டுச் சொல்லும்போது எண்ணியது வேறு, பேசுவது வேருக வருகிறது என்பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். அதற்குக் காரணம் ஆளும் கட்சியினர் செய்கிற ஒவ் வொரு செயலையும் குறைப்பட்டுத் தான் பேசவேண்டுமென்று எதிர் கட்சியினருக்கு ஒரு விதியை ஏற்படுத்திக் கொண்டிருப்பதன் காரணமாக, அவர்கள் எந்தத் திட்டங்களை நிறைவேற்றினாலும், எந்த நன்மைகளைச் செய்தாலும், அந்த நன்மைகளை நன்மைகளாகக் கருதாமல், அதன் உள்ளே எங்கே குற்றம் குறை இருக்கிறது என்று அலசி அலசிப் பார்த்து எடுக்க முயற்சிக்கிருர்களே தவிர, உண்மையாக அதில் குற்றம் குறை இருப்பதாக ஒருவரும் சொல்ல முடியாதபடி இந்த உரை அமைந்திருப்பது பெருமைப்படத் தக்க ஒரு விஷயமாக இருக்கிறது.

மேலும் அநேக வருஷங்களாக காங்கிரஸ் மகா சபையின் கொள்கையாக வைக்கப்பட்டிருக்கிற நிலச் சீர்திருத்தம் மிக அண்மையில் வருவதற் கிருக்கிறது என்று இந்த உரையில் குறிப்பிடப்பட்டிருப்பதானது நாம் ஒரு உயர்ந்த லட்சியத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறோம் என்பதை நன்ருக இந்த உரை விளக்கிக் காண்பித்திருக்கிறது.

அது மாத்திரமல்லாமல் என்.ஜீ.ஓக்களை நாங்கள் தான் கவனிக்கிறோம் என்று மற்ற கட்சிக்காரர்கள் நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். ஆனல், என்.ஜீ.ஓக்களை மற்ற கட்சிக்காரர்கள் கவனிப்பதில்லை, அரசாங்கம் என் றைக்கும் அவர்களுடைய நலனில் பிரத்தியேக அக்கறை கொண்டிருக் கிறது, அவ்வப்போது தேவைக்கேற்ப, அரசாங்கத்தினுடைய பொருளாதா ரத்திற்கேற்ப நிவாரணம் அளித்துக் கொண்டு வந்திருக்கிறது, அதோடு மட்டுமல்லாமல் இப்போது இடைக்கால நிவாரணமாக ரூபாய் 5 அளிக்கப் படும், இந்த ரூபாய் 5 ஊராட்சி மன்ற அலுவலகங்களில் உள்ள ஊழியர் களில் 300 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்களுக்கும், 300 ரூபாய்க்குக் கீழே சம்பளம் வாங்கக் கூடியவர்களுக்கும் அளிக்கப்படும் என்று அதோடு விட்டு விடாமல் சர்க்கார் மானியம் பெற்று நடத்தப்பட்டு வருகின்ற பள்ளி களில் வேலை பார்க்கும் ஆசிரிய-ஆசிரியைகளுக்கும் இந்த நிவாரணம் தரப்படும் என்று குறிப்பிட்டிருப்பதானது அரசாங்கத்தின் உயர்ந்த நோக்கத்தைக் காட்டுவதாக இருக்கிறது என்பதை நாம் கட்டாயமாகப் போற்றவேண்டியிருக்கின்றது.

ஏனைய பிரச்னைகளை எடுத்துக் கொண்டு பார்ப்போமானல், நமது நாட்டில் இது வரையில் நடந்திருக்கின்ற பெரிய பெரிய திட்டங்களைப் பற்றியும், அதோடு சிறிய திட்டங்களைப்பற்றியும் காண்கிறோம். இனிமேல் நமது நாட்டில் நடக்கவிருக்கின்ற பெரிய பெரிய தொழில்களைப் பற்றியும், தொழிற்சாலைகளைப் பற்றியும், ஏனைய திட்டங்களைப் பற்றியும் அதில் குறிப்பிடப்பட்டிருப்பது நமது நாட்டில் வருங்காலத்தில் ஒரு நல்ல நிலையை உண்டாக்கப் போகிறது என்று பார்க்கும்போது நாம் சந்தோஷப் படவேண்டி யிருக்கிறது.

ஆனல், இதை எதிர்ப்பவர்கள்—குற்றம் குறை காண்பவர்கள்—குறை களைக் காணத்தான் செய்வார்கள். இந்த உரைக்கும் "ஆகாஷ்வாணி"-க் கும் சம்பந்தம் எதும் இல்லாதிருந்தும் கூட, திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள், "ஆகாஷ் வாணி" என்ற பெயரை மாற்றி "வானெலி" என்ற பெயரை வைக்க வேண்டுமென்று ஒருவர் உபவாசம் இருக்கிருர், அதனைப் பொருட்படுத்தவில்லை சர்க்கார் என்று இங்கே குறிப் பிடுவதானது வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய ஒரு விஷயம். "ஆகாஷ் வாணி" என்ற பெயரை மாற்றவேண்டுமென்று சொல்லுகிற திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் தங்கள் பெயர்களை முதலில் மாற்றிக் கொள்ளட்டும், பிறகு இந்த யோசனையைச் சொல்ல முன் வரட்டும் என்று சொல்ல விரும்புகிறேன். "சத்தியவாணி முத்து" என்ற பெயரில் "சத்திய வாணி" என்பது எந்தச் சொல்? "ஷண்முகம்" என்று இருப்பது எந்தச் சொல்? "கோவிந்தன்" என்று இருப்பது எந்தச் சொல்? (அப்ளாஸ்) ஆக, இப்படி நம் நாட்டில் இருக்கிற 40 கோடி மக்களும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையத்தின் பெயரை மாற்றவேண்டுமென்று

[Srimathi P. K. R. Lakshmikantham] [6th February 1959

உபவாசம் இருக்க ஆரம்பித்தால் அரசாங்கம் என்ன ஆகும்? இதை எல்லோரும் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள ஆசைப் படுகிறேன். தமிழ் மொழியின் மீது பற்று இருக்க வேண்டும், தாய் மொழியின் மீது பற்று இருக்க வேண்டும், தாய் மொழியின் முன்னேற் றத்தில் அக்கரை இருக்க வேண்டும் என்பதை நானும் ஒத்துக்கொள்கிற வள்தான். ஆனாலும், தாய் மொழியின் மீது—தமிழ் மொழியின் மீது —பற்று இருக்க வேண்டுமே தவிர, மொழிப் பைத்தியம் இருக்கக்கூடாது, வெறி இருக்கக்கூடாது, என்று இங்கே சுட்டிக் காட்ட விரும்புகிறேன். எல்லா விஷயத்திலும் வெறி வந்துவிடுமானால், அந்த வெறி நமது நாட்டைக் குட்டிச் சுவராக ஆக்கி விடும் என்பதைக் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும் என்று இங்கே கூற விரும்புகிறேன்.

மேலும் நேற்றுப் பேசும்போது, இங்கே எடின்பரோ கோமகன் வரும் போது, என்றும் கண்டிராத வரவேற்பைக் காங்கிரஸ் ஆட்சி கொடுத்தது என்று கண்டிக்கும் முறையில் பேசப்பட்டது. உண்மையாக அன்று காங் கிரஸ் மகாசபையும் காங்கிரஸ்காரர்களும் ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்ததே தவிர ஒவ்வொரு ஆங்கிலேயனையும், தனிப்பட்டவர் எவரையும் எதிர்க்க வில்லை என்பதை அவர்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இன்றைக்கு நாம் சுதந்திரம் பெற்றிருக்கிறோம். சுதந்திரம் பெற்றிருக் கின்ற நாம் ஒவ்வொரு நாட்டுக்கும் பெருமை தரவேண்டும். மற்ற நாடு களிலிருந்து வரக் கூடியவர்களுக்கு வரவேற்புக் கொடுக்கவேண்டும். அவர்களைச் சரிசமமாக நடத்தவேண்டும். எடின்பரோ கோமகன் அல்ல, குருஷ்சேவ் வந்தாலும் அல்லது வேற்றுமைக் கொள்கைகள் உடையவர்கள் வந்தாலும் காங்கிரஸ் ஆட்சி ஒரு பெரும் வரவேற்பைக் கொடுக்கின்றது என்பதை கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

மேலும் கவர்னர் உரையில் அவர்கள் கலந்து கொள்ளாததைப்பற்றிப் பேசும்போது கவர்னர் பதவியை எதிர்க்கிறோம் என்று சொல்வது கிடை யாது. கவர்னர் பதவியில் வட நாட்டினர் இருப்பதால் அந்தப் பதவியை வெறுக்கிறோம் என்று சொல்கிறார்கள். வட நாட்டினரை வெறுக்கிறவர் கள் தென்னாட்டினர் வந்து விட்டால் அவர்கள் பதவியை ஒத்துக்கொண்டு விடுவார்களா என்று கேட்கிறேன். ஒரு அரசாங்கத்தில் எந்த முறை இருக்க வேண்டுமென்று இருக்கிறதோ அந்த முறையின் கீழ்தான் கவர்னர் இருக்கிறார். கவர்னராக யார் வந்தாலும் அவருக்கு வரவேற்பும் மரியாதையும் கொடுக்கவேண்டும் என்ற ஒரு நல்ல பண்பாட்டை எல்லாக் கட்சிகளும் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று குறிப்பிட ஆசைப்படு கிறேன்.

மேலும், இந்த அரசாங்கத்தின் கல்விக் கொள்கையில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதன் காரணமாக சில பள்ளிகள் மூட வேண்டிய தருவாயில் இருக்கின்றன என்பதைச்சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அரசாங்கத்தினு டைய மானியம் பெற்று நடத்தி வருகிற சில ஆரம்பப் பள்ளிகள் அரசாங்க மான்யம் பெற்றால் கட்டணம் வசூலிக்கக் கூடாது, கட்டணம் வசூலித்தால் அரசாங்க மான்யம் கிடையாது என்ற நிபந்தனை இப்போது இருக்கிறது. இந்த முறையின் காரணமாக அநேக பள்ளிகள் மூடவேண்டியிருக்கும். இப்படிப்பட்ட நிலையை நாம் ஏற்படுத்தாமல் இருக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டு கவர்னர் பெருமான் உரைக்கு நன்றி தெரிவிக்கும் பிரேரணையை ஆதரித்துப் பேசி என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

1-20 p.m. SRI A. GOVINDASAMI : மதிப்பிற்குரிய சட்ட மன்ற உப தலைவர் அவர் களே, கவர்னர் உரையின் மீது பேசுகின்றபோது, எங்களுடைய அதிருப்தி யைத் தெரிவிக்கின்ற முறையிலும், கவர்னருடைய உரையில் சில விஷயங் களை உண்மைக்கு மாறாகவும், சில விஷயங்களைக் குறிப்பிடாமலும் இருக் கின்ற காரணத்தாலும் என்னுடைய கருத்தை இங்கே கூற விரும்பு கிறேன்.

இந்தியை ஆட்சி மொழியாக்கும் விஷயத்திலும், பஞ்சாயத்துச் சட்டம், மாணவர்களை அரசியலிலே ஈடுபடுத்தக் கூடாதென்ற கருத்திலும் ஒரு மனப்பட்ட கருத்து வந்துவிட்டதாக கவர்னர் அவர்களுக்கு யாரோ தெரி

6th February 1959] [Sri A. Govindasami]

வித்து, அதை நமக்கு அவர் தெரிவிக்கின்றார். இந்தியை ஆட்சி மொழியாக்கும் விஷயத்தில் ஒருமனப்பட்ட கருத்து வரவில்லை என்பதை நாங்கள் பல தடவை இதே மன்றத்திலே வலியுறுத்திக் கூறி வந்திருக்கிறோம். இந்தியை ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ள திராவிட முன்னேற்றக் கழகம் தயாராக இல்லை என்பதை நாட்டிலே பரவலாகச் சொல்லியும், காங்கிரசிலே இருக்கும் ராஜகோபாலாச்சாரியார் போன்றவர்கள் கூட இந்தியை எதிர்த்தும், நாட்டிலே பரவலாக இந்திக்கு எதிர்ப்பு இருக்கிறது என்பதைத் தெரிந்தும், இந்தியை ஆட்சி மொழியாக்கும் விஷயத்திலே ஒருமித்த கருத்து வந்தது என்று சொல்வதானது உண்மைக்கு மாறான விஷயம் என்று நான் கருதுகிறேன்.

பஞ்சாயத்துச் சட்ட விஷயத்திலும் ஒருமனப்பட்ட கருத்து வந்து விட்டதாகவே நமது கவர்னர் அவர்கள் கருதுகின்றார்கள். பஞ்சாயத்துத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு பொது மக்களிடத்திலே இருக்கவேண்டுமென்ற கருத்தை இங்கே வலியுறுத்திக் கூறியிருக்கிறோம். ஒரே பெட்டியிலே இரண்டு, மூன்று வோட்டுக்களைப் போடுகின்ற நிலைமை போகவேண்டுமென்றும் நாங்கள் சொல்லி யிருக்கிறோம். அதையெல்லாம் மெஜாரிடி பலத்தைக் கொண்டு அலட்சியப்படுத்திவிட்டு, ஆளும் கட்சியினர் சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள். எங்களுடைய கருத்தும் அங்கே இருக்கத்தான் செய்கிறது.

அரசியலிலே மாணவர்களைக் கலக்கக்கூடாது என்ற கருத்துக்கு திராவிட முன்னேற்றக் கழகம் தயாராக இருக்கிறது; தடையாக இருக்கவில்லை. ஆனால், அதில் இந்திய காங்கிரஸ் ஸ்தாபனமாக இருக்கும் மாணவர் காங்கிரஸ்தான் இடையூறாக இருக்கிறது என்று கவர்னர் அவர்களுக்கும் நிதி அமைச்சர் அவர்களுக்கும், இந்த அவையின் அங்கத்தினர்களுக்கும் தெரியும். அப்படியிருக்க, இப்படியெல்லாம் ஒருமனப்பட்ட கருத்து வந்து விட்டதாகச் சொல்வது உண்மைக்கு மாறானது என்று நான் கருதுகிறேன்.

பருவ நிலை பரவாயில்லையாம். ஆனால், சில மாவட்டங்களை மட்டும் கவர்னர் உரையிலே குறிப்பிட்டுவிட்டு, மற்றப் பகுதிகளை அதிலே குறிப்பிடவில்லை. அவர்கள் தமிழ்நாட்டிலே பல பகுதிகளுக்குப் பவனி வந்தார்கள். அவர்கள் பவனி வந்தது, அனேகமாக நகர்ப்புறங்களிலேதான். கிராமப் புறங்களுக்குச் சென்று பார்க்கவே இல்லை. அவரைக் கிராமப் புறங்களிலே கொண்டுபோய்க் காட்டியிருந்தால், கிராமங்களின் நிலைமையை அவர்கள் நன்றாக உணர்ந்திருக்க முடியும், உண்மை நிலைமையை நேரில் அறிந்துகொண்டிருக்க முடியும். சர்க்கார் அத்தகைய வசதியை அவருக்கு ஏற்படுத்தித் தருவதற்குப் பதிலாக, நகரப் பகுதிகளுக்கு மட்டும் அவரை அழைத்துச் சென்றிருக்கிறார்கள் என்ற காரணத்தினாலே தான், அவருடைய உரையிலே கிராமப் புறங்களைப்பற்றி குறிப்பிடாமலேயே விட்டிருக்கிறார். நான் இந்த மாநிலத்தின் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த்து வந்திருக்கிறேன். கன்யாகுமரி, திருச்சி, வடாற்காடு, தென்னாற்காடு போன்ற மாவட்டங்களிலும், குறிப்பாக, தென்னாற்காடு ஜில்லாவிலே விழுப்புரம், விருத்தாசலம், செஞ்சி, கள்ளக்குரிச்சி, திண்டிவனம் பகுதிகள் மிக வறட்சியான நிலைமையில் இருக்கின்றன என்று இந்த அவையிலே இருக்கும் அமைச்சர்களுக்குத் தெரியும். தெரிந்திருந்தும், இதைக் கவர்னர் உரையில் குறிப்பிட்டு நிவாரணம் செய்திருப்பாரானால் நன்றாக இருந்திருக்கும்.

விருத்தாசலத்தில், வெல்லிங்டன் ரிசர்வாயரிலிருந்து பாசன வசதி பெற்றுக்கொண்டிருந்த பகுதியிலே மிக மோசமான நிலைமை ஏற்பட்டு, அங்கே வரி வஜா செய்யும்படியான சூழ்நிலை உருவாகியிருக்கிறது. அது பற்றியும் சந்தர்ப்பம் வரும்போது வாதாட இருக்கிறோம்.

விளைச்சல் அதிகம் இருக்கிறது என்று சொல்கிறார்கள். அதற்கான அறிகுறி காணப்படுகிறது என்றும் கவர்னர் உரையிலே சொல்லப்பட்டிருக்கிறது. விலைவாசி ஏற்றத்தைத் தடுக்க அரசாங்கத்தில் உள்ளவர்களுக்குச் சக்தி இல்லையா, திறமை இல்லையா என்று நான் கேட்கிறேன். என் விலைவாசி ஏற்றம் இருக்கிறது? கள்ள மார்க்கெட்காரர்களும்,

[Sri A. Govindasami] [6th February 1959

பதுக்கல்காரர்களும் இருப்பதை இந்த அரசாங்கம் அனுமதிக்கிறதா? அல்லது அப்படிப்பட்டவர்களைக் கண்டுபிடித்து அவர்கள் மீது நடவடிக்கை எடுத்திருக்கிருர்களா? இதுபற்றி புள்ளி விவரம் ஏதாவது கொடுத்திருக்கிருர்களா என்ருல் இல்லை. விளைச்சல் அதிகம் இருக்கிறது என்று சொல்லும் இதே நேரத்தில் விலைவாசி ஏறுகிறது, மக்களுக்கு வேண்டிய அரிசி கிடைக்கவில்லை என்ற இந்தக் குறையை இங்கே சொல்லித்தீர வேண்டிய நெருக்கடியில் இருக்கிருேம்.

வெள்ளைக்காரர்கள் இங்கே ஆண்டபோது, ரூபாய்க்கு நாலு படி, ஐந்து படி அரிசி, ரங்கூன், பர்மா முதலிய இடங்களிலிருந்து இறக்குமதி செய்தாவது கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அதுபோன்று ஏன் நம்முடைய அரசாங்கமும் வெளி நாடுகளிலிருந்து அரிசி இறக்குமதி செய்து கொடுக்கக் கூடாது என்று நான் கேட்கிறேன்.

சுயதேவைப் பூர்த்தி என்றும், உணவு உற்பத்தி பெருக்கம் என்றும் நேரு ஒரு கோஷத்தைக் கொடுத்தார்கள். ஏழை எளிய விவசாயிகள், நிலமில்லாத ஆதித் திராவிட மக்கள் அத்தனை பேரும் புறம்போக்கு நிலங்களில் உழைத்துப் பயிரிட்டு வந்தார்கள். அந்த நிலங்களையெல்லாம் இன்று அரசாங்கம் கைப்பற்றும் நிலையிலேயும், நிலங்களைப் பண்படுத்திய வர்கள் மீது அபராதம் விதிக்கும் நிலைமையிலேயும் இருக்கிறதே தவிர, அந்தப் புறம்போக்கு நிலங்களைப் பண்படுத்திய ஏழை ஆதித் திராவிட மக்களுக்கே ஜாரி செய்து கொடுக்க கூடிய நல்ல எண்ணம் இந்த அரசாங்கத்திற்கு இல்லை என்ற குற்றச்சாட்டை இந்த இடத்தில் நான் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை.

விவசாயிகள் உற்பத்தி செய்கின்ற விளை பொருள்களுக்கெல்லாம் நல்ல பணம் தேடித் தரக்கூடிய வகையில், கரும்பு பயிரிடுகின்ற விவசாயிகளுக்கு என்ன வசதி செய்து கொடுத்திருக்கிருர்கள் இந்த அரசாங்கம்? தென்ஞற்காடு ஜில்லாவிலே ஒரு சர்க்கரை ஆலை துவக்கவேண்டுமென்று முயற்சி செய்தார்கள். வெள்ளைக்காரனை விரட்டிவிட்டோம் என்று சொல்லுகிருர்கள். ஆனல், இப்பொழுதும் அங்கே வெள்ளைக்காரக் கம்பெனி இருந்து கொண்டு இன்றைக்கும் சுரண்டிக்கொண்டிருக்கிறது. தனியார் துறையிலோ கூட்டுறவு முறையிலோ நடத்துவதற்கு அரசாங்கம் முன்வருவதில்லை. வளவனூரில் தனியார் ஒருவர் சர்க்கரை ஆலை ஒன்று வைப்பதற்கு லைசென்சு கேட்டார். ராஜ்ய அரசாங்கம் சிபார்சு செய்திருந்தது. ஆனல், மத்திய அரசாங்கம் தட்டிக் கழித்துவிட்டது. வடக்கு நம்மைப் புறக்கணிக்கிறது என்பதற்கு இதை ஒரு எடுத்துக்காட்டாகச் சொல்கிறேன்.

தென்ஞற்காடு மாவட்டத்திலே மணிலாக்கொட்டை உற்பத்தி அதிகம். "மணிலாக்கொட்டை ஜில்லா" என்று அந்த ஜில்லாவைச் சொல்வது உண்டு. விழுப்புரத்தில் வனஸ்பதி தயாரிப்பதற்காக ஒரு ஆலை கட்டியிருக்கிருர். 28 லட்சம் ரூபாய் செலவில் இன்ஜின்களை வாங்கி இருக்கிருர். ஒரு ஆலை கட்டி மெஷினரி வந்திருக்கிறது. நூற்றுக்கு மேற்பட்ட மோட்டார்கள் இருக்கின்றன. அங்கேயுள்ள வனஸ்பதி ஆலையில் ஆயிரம் பேர்களுக்கு வேலை கொடுக்கலாம். தினமொன்றுக்கு 30 ஆயிரம் மூட்டைகள் வரையில் அரைக்கலாம். வனஸ்பதி, ஸோப் உற்பத்தியும் செய்யலாம். அப்படியெல்லாம் வாய்ப்புகள் இருக்கக்கூடிய ஒரு தொழிற்சாலையை எடுத்து நடத்துவதற்கு நல்ல எண்ணம் இல்லாத காரணத்தால் அரசாங்கம் தட்டிக் கழிக்கிறது. அரசாங்கம் பத்து லட்ச ரூபாய் உதவி கொடுத்தது; அதைத் திருப்பிப் பெற முயற்சிக்கிறதே தவிர, அதை எடுத்து நடத்துவதற்குத் துணியவில்லை. திரு ஜி. டி. நாயுடு அவர்கள் அதை எடுத்து நடத்துவதற்கு அனுமதி தாருங்கள் என்று கேட்டார். 6 லட்ச ரூபாய் தருகிறேன், விலைக்குத் தாருங்கள் என்று கேட்டார். அல்லது, குத்தகைக்காவது எடுத்து நடத்துவதற்குத் தயாராக இருக்கிறேன் என்று கேட்டும், அவரை அனுமதிப்பதற்கு இந்த அரசாங்கத்திற்கு நல்ல எண்ணம் இல்லை. தனியாருக்கு அனுமதியளிக்காவிட்டாலும், இந்த சாதாரணத் தொழிலை எடுத்து நடத்துவதற்கு இந்த அரசாங்கத்திற்குத் திராணி இல்லையா என்று நான் கேட்கிறேன்.

6th February 1959] [Sri A. Govindasami]

நெய்வேலித் திட்டத்தைப்பற்றி பிரமாதமாகப் பேசுகிறார்கள். நெய்வேலியை நினைக்கின்றபோது, அந்தத் திட்டத்தை எந்த நிலைமையிலே உருவாக்குகிறார்கள் என்று பார்க்கவேண்டும். அந்தத் திட்டத்தை எல்லோரும் வரவேற்கிறார்கள். அது என்னுடைய மாவட்டத்திலே இருக்கிறது என்பது குறித்து நானும் பெருமைப்படுகிறேன். ஆனால், அந்தப்பகுதி மக்களுடைய நிலைமையைப்பற்றி யாராவது சிந்தித்தார்களா என்று நான் கேட்கிறேன். 1953-ம் ஆண்டிலே நில ஆர்ஜிதச் சட்டம் இதே சட்டமன்றத்திலே நிறைவேற்றப்பட்டது. இந்த நில ஆர்ஜித சட்டம் ஹைகோர்ட்டாரால் உடைக்கப்பட்டுவிட்டது. அதற்கு என்ன காரணம்? 1947-லே கொடுத்த நஷ்ட ஈடுதான் கொடுக்கப்படும் என்று அந்த சட்டத்தைத் தீட்டினார்கள். ஆனால், ஹைகோர்ட்டு அதை நிராகரித்துவிட்டு, இன்றைக்கு உள்ள நிலைமைக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டுமென்று தீர்ப்பு கூறியிருக்கிறது. அதன்படி நிலத்தை நெய்வேலி திட்டத்திற்கு தந்த விவசாயிகளுக்கு நஷ்ட ஈடு கூடிய விரைவில் கொடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

உலகத்தின் பல பாகங்களிலிருந்து வரும் தலைவர்களை காஞ்சீபுரம், மகாபலிபுரம், நெய்வேலி முதலிய இடங்களுக்குப் அழைத்துக்கொண்டு போய் காட்டுகிறோம். அங்கெல்லாம் அழைத்துச் சென்று, அவர்களிடம் பெருமையாகச் சொல்லிவிட்டால் மாத்திரம் போதாது. நேரு நெய்வேலிக்கு வந்தால், அவர் பத்து நிமிஷங்கள் தங்கிச் சாப்பிடுவதற்கு "ஏர் கண்டிஷன் ரூம்" 25 ஆயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்டது. ஆனால், அந்த இடத்தில் அந்த ஏர் கண்டிஷன் ரூம் இப்போது கிடையாது. தற்காலிகமாக, சில நிமிஷங்கள் தங்குவதற்கு அவ்வளவு பணம் பாழாயிருக்கிறது. இதுவரை நெய்வேலி திட்டத்திற்கு 12 கோடி ரூபாய் செலவாகியுள்ளது. இந்தப் பகுதியில் அதிகாரிகளுக்கு வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆனால், ஏழைத் தொழிலாளர்களுக்கு நல்ல வீடு இல்லை. அவர்களுக்கென கட்டப்பட்டிருக்கும் வீடுகள் மாயா பஜார் வீடுகள் என்று குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. ஏழை ஜனங்கள் கஷ்டப்படும்படியான நிலைமையில் இருக்கிறார்கள். நெய்வேலியில் உத்தியோகங்களைக் கொடுப்பதிலும் குறிப்பிட்ட சமூகத்தினருக்குத்தான் கொடுக்கப்படுகின்றன. அங்கேயிருக்கும் நிர்வாக அதிகாரி ஸ்ரீனிவாசன் என்பவர் அப்படிச் செய்துகொண்டிருக்கிறார். நம்முடைய ராஜ்ய சர்க்கார் அதுபற்றி நடவடிக்கை எடுக்கவில்லை.

நெய்வேலித் திட்டம் மத்திய அரசாங்கத்திற்குக் கட்டுபட்டதாய் இருக்கவேண்டும் என்றும், மத்திய அரசாங்கத்தினுடைய பணம் வரவேண்டுமானால், அது மத்திய அரசாங்கத்திற்குத்தான் சொந்தமாக இருக்கவேண்டும் என்றும் திரு. வேதரத்னம் பிள்ளை அவர்கள்—நமது பெருமைக்குரிய தலைவர் அவர்கள்—குறிப்பிட்டது வேதனையாக இருந்தது. பக்ரா-நங்கல் திட்டத்திற்குப் பணம் கொடுப்பது யார்? மத்திய அரசாங்கம். அப்படியிருந்தும், அது பஞ்சாப் அரசாங்கத்திற்குச் சொந்தம். அஸ்ஸாம் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலைக்குப் பணம் கொடுப்பது யார்? அதற்கும் மத்திய சர்க்கார்தான் கொடுக்கிறார்கள். அது அஸ்ஸாம் அரசாங்கத்திற்குச் சொந்தம். ஏன் நெய்வேலியும் நம்முடைய மாநில அரசாங்கத்திற்குச் சொந்தமாக இருக்கக்கூடாது என்று திரு. ஆசைத்தம்பி அவர்கள் கேட்டால், அதற்கு எத்தனையோ சமாதானங்கள் சொல்கிறார்கள். இதெல்லாம் நியாயம் இல்லை என்பதை எடுத்துக்காட்டும் வகையில் திரு. வீரபாகு அவர்கள் நல்ல முறையிலேயே சொன்னார்கள். ஜனத்தொகை அடிப்படையில் பணம் கேட்டு, அவர்கள் கொடுக்க மறுத்தால், பணத்தைச் செலவு செய்துவிட்டோம், பணம் கொடுங்கள் என்று வற்புறுத்தலாம் என்று நல்ல கருத்தை அவர்கள் சொன்னார்கள். அதை வரவேற்கிறோம். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திரு. முத்தையா செட்டியார் அவர்கள் சொன்ன கருத்தைப்பற்றி குறிப்பிடுகையில், "பழைய வாசனையில் அவர் சொல்கிறார்" என்ற முறையில் சொல்லப்பட்டது. ஆனால், வீரபாகு அவர்கள் எங்கள் கட்சியைச் சேர்ந்தவரா? இல்லையே. அப்படியிருக்க, ஏன் அந்தக் கருத்தை அவர் தெரிவிக்கிறார் என்றால், அவர் இளைஞர், முற்போக்குக் கருத்து அவர்களுக்கு இருப்பதால்தான் அவர் அப்படிக் கேட்கின்றார்.

[Sri A. Govindasami] [6th February 1959

நிலச் சீர்திருத்தம் குறித்து திராவிட முன்னேற்றக் கழகத்தார் ஒன்றுமே சொல்லவில்லையே என்று பரிதாபப்பட்டார் திரு. வேதரத்னம் அவர்கள். அதே நேரத்தில், தகுந்த நஷ்ட ஈடு எப்படிக் கொடுக்க வேண்டும் என்பதையும் அவர்கள் சொன்னார்கள். அதன் கருத்து விளங்குகிறது. ஆனால், திரு. மகாலிங்கம் அவர்கள் நேற்றைய தினம் பேசிய கருத்தைச் சற்று கவனிக்கவேண்டும். ஒரு மந்திரிக்கு ஒரு ஆண்டுக்கு வருமானம் இருபதாயிரம் ரூபாய் என்றால், அந்த இருபதாயிரம் ரூபாய் வருமானம் வருகிற அளவுக்கு நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டுங்கள் என்று அவர் சொன்னார். இத்தகைய நிலச் சீர்திருத்தச் சட்டம் வந்தால், நாட்டுக்கு நன்மை இருக்குமா என்று சந்தேகப்படுகிறோம். உற்பத்தி குறையாமல் இருக்கக்கூடிய அளவுக்கு நிலச்சீர்திருத்தச் சட்டம் கொண்டு வரவேண்டுமென்று சொல்லப்பட்டது. நிலத்தைப் பிரிப்பதினால் உற்பத்தி குறையாது என்று நாங்கள் கருதுகிறோம். காஷ்மீரிலே நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவந்தார்கள். சைனாவிலே நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவந்தார்கள். அங்கெல்லாம் உற்பத்தி குறையவில்லை. அங்கே உற்பத்தி பெருகியிருக்கிறது என்பதைத்தான் நாங்கள் இங்கே எடுத்துச் சொல்கிறோம். ஆகவே, நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டு வருவதை நாங்கள் ஆதரிக்கிறோம். வரவேற்கிறோம். பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் வந்தது. அதை நாங்கள் வரவேற்கிறோம். நியாய வாரச் சட்டம் வந்தது. அதைக் கண்டு நாங்கள் மகிழ்ச்சி அடைந்தோம். அதேபோல் நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்டுகிற சட்டம் வருமானால், அதையும் நாங்கள் வரவேற்போம். ஆகவே, அந்தச் சட்டம் கொண்டுவருவதில் ஏன் தயக்கம் இருக்கவேண்டும்? 1947-ம் ஆண்டிலிருந்து சொல்லிக்கொண்டு வருகிறார்கள். நமது மதிப்பிற்குரிய மாணிக்கவேலு அவர்கள் 1953-இலே இந்தக் கருத்தை இங்கே வெளியிட்டார்கள். அதற்குப் பிறகு, "புலி வருகிறது, புலி வருகிறது" என்று சொல்லிக்கொண்டேயிருக்கிறார்கள். ஆனால், கொண்டுவந்தபாடில்லை. இத்தகைய சட்டம் வருவதற்கு அவர் தடையாயில்லை என்று தெரிகிறது. ஆனால், அவர்களுக்குப் பின்னாலிருப்பவர்கள் தடையாக இருக்கிறார்கள். காங்கிரஸ்காரர்கள்தான் இதற்குத் தடையாக இருக்கிறார்கள். காங்கிரஸ் தரப்பில் இருக்கிற திரு. ராமலிங்கம் போன்றவர்கள் எல்லாம் இந்தச் சட்டத்திற்கு இடையூறாக இருப்பார்களே தவிர, திரு. ஆசைத்தம்பியோ, நானோ, இங்கேயிருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தினரில் யாரும் தடையாக இருக்க மாட்டோம். நிலச் சீர்திருத்தச் சட்டம் வேண்டும் என்று நாங்களும் கை தூக்கிப் பிரசாரம் செய்யத் தயாராய் இருக்கிறோம். ஆனால், அவர்கள் கட்சியிலேயே இருக்கிறவர்களைக் கண்டு அவர்கள் பயப்பட்டால், நிலச் சீர்திருத்த விஷயம் முன்னேற்றமாகப் போகவே முடியாது என்று நான் குறிப்பிட விரும்புகிறேன்.

1-30 p.m.

**Sri N. S. RAMALINGAM:** Sir, on a point of personal explanation. கனம் கோவிந்தசாமி அவர்கள் பேசும்போது என்னுடைய பெயரைக் குறிப்பிட்டார். அதற்கு நான் பதில் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. நிலச் சீர்திருத்தம் சம்பந்தமாக உச்ச வரம்பு கட்டக்கூடிய சட்டம் வந்தால் அதை நான் முழு மனதோடு வரவேற்பேன் என்பதை மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

* **Sri A. GOVINDASAMI:** கனம் ராமலிங்கம் அவர்கள் அதை மனப்பூர்வமாக வரவேற்பதால் அவர் மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருப்பார் என்றே நினைக்கிறேன்.

சமுதாய வளர்ச்சித் திட்டத்தில் ஏன் மேஜர் பஞ்சாயத்து கிராமங்களைச் சேர்க்கக்கூடாது என்று கேட்கிறேன். சமுதாய வளர்ச்சி திட்டத்தில் வளவனூரையும் சேர்த்துக்கொள்ள வேண்டுகிறேன். சமுதாய வளர்ச்சி திட்டம் இல்லாத இடங்களுக்கு லோகல் டெவலப்மென்ட் வேலைகளை தற்சமயம் நிறுத்த சர்க்கார் கருதுகிறார்கள். அந்த ஸ்தல அபிவிருத்தி திட்டத்தை அமுல் நடத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பஞ்சாயத்து சட்டத்தை பாஸ் செய்தும்கூட ஏன் இன்னும் பஞ்சாயத்து யூனியன்கள்

6th February 1959] [Sri A. Govindasami]

ஏற்படுத்த துரித நடவடிக்கை எடுக்கவில்லை என்பதையும் அறிய விரும்பு கிறேன். பஞ்சாயத்து தேர்தல்கள் எல்லாம் முடிந்த சமுதாய நல பகுதி களில் பஞ்சாயத்து யூனியன்களைப் பரவலாகத் துவக்கி திட்டத்தை நிறை வேற்றவேண்டும்.

அடுத்தபடியாக மின்சார விஷயமாக கொஞ்சம் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அதைப்பற்றி சொல்லாவிட்டால் அவருக்கு (மின்சார மந்திரிக்கு) வருத்தமாக இருக்கும். கிட்டத்தட்ட 7,000 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். (டிபுடி ஸ்பீக்கர் : 8,000 கிராமங்கள்) கொடுக்கப்போகும் 1,200 கிராமங்களையும் சேர்த்தால்தான் 8,000 கிராமங்கள் ஆகும். இந்த விஷயத்திலும் எங்கள் மாவட்டம் புறக் கணிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்தே தென்னாட்டிலேயும் தென்னாற்காடு புறக்கணிக்கப்படுகிறது என்பது எடுத்துக்காட்டாக இருக்கும். எங்கள் மாவட்டத்தில் சுமார் 210 கிராமங்களுக்குத்தான் மின்சாரம் கொடுக்கப்பட் டிருக்கிறது. இப்படிக் கொடுத்தால் பிரச்னை எப்படி தீரும் என்று கேட்காமல் இருக்க முடியவில்லை.

ஆகாசவாணி என்று பெயர் வைப்பது அகில இந்திய ரீதியில் வைக்கப் பட்டிருக்கிறது என்று சர்தார் வேதரத்னம் சொல்லுகிறார்கள். அப்படி வைத்தால்தான் உலகத்திற்கு தெரியும் என்றும் சொல்லுகிறார்கள். அந்த நிலைமையில் இந்தியா என்பதற்கு என் "பாரத்" என்று பெயர் வைத்தார்கள். அப்படி வைத்தால் மட்டும் உலகத்திற்குத் தெரிந்து விடுமா என்று கேட்கிறேன். அதைப்போலவே இதையும் என் மாற்றக் கூடாது என்று கேட்கிறேன்.

ஊட்டிக்கு சட்டசபையைக் கொண்டு போய் ஏன் பணத்தை வீணுக்க வேண்டும், எல்லா கட்சியும் ஒன்றுபட்டு தீர்மானித்தால்தான் போவோம் என்று இதற்கு முன்னால் சொன்னார்கள். இப்பொழுது திராவிட முன் னேற்றக் கழகம் எதிர்த்தும்கூட ஏன் போகவேண்டும்? அங்கு போய் பணத்தை விரயம் செய்வதற்குப் பதிலாக அந்தப் பணத்தை எடுத்து அங்கு ஏதாவது சீர்திருத்தம் செய்ய முன்வரலாம். திராவிட முன்னேற்றக் கழகம் எதிர்ப்பதால் அவர்களுக்கு விட்டுக்கொடுக்கக்கூடாது என்பதற்காக பத்து நாட்களாவது அங்கே கூடலாமென்று முடிவு எடுப்பானேன். கனம் பக்தவத்சலம், கனம் காமராஜ் அவர்கள்கூட எதிர்த்து இருக்கிறார்கள். ஆனால் கனம் சுப்ரமணியம் மட்டும் ஊட்டிக்குப் போய் தீரவேண்டும், இல்லா விடில் தி.மு.க. வெற்றியாகிவிடும். அங்கு போய்விட்டு வந்தால்தான் அதிலுள்ள கஷ்ட நஷ்டங்கள் தெரியவரும். இங்கிருந்து அங்கு பைல்கள் போய்விட்டு வரும் கஷ்டங்கள் பிறகுதான் தெரியும். அதன் பிறகு ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்களை உணர்ந்து இனிமேலாவது திருத்திக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்கிறேன். N.G.O.-க்களுக்கு ரூ. 5 பஞ்சப்படியில் உயர்வு போதாது. அடிப்படைச் சம்பளத்தையும், பஞ்சப்படிகளையும் உயர்த்த வேண்டுகிறேன்.

**DEPUTY SPEAKER** : The House will now adjourn and meet again tomorrow at 9 a.m.

The House then adjourned.

III. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE

*A. Statutory Orders, Rules and Notifications.*

*Revenue, dated 26th November, 1958 amending the Revenue Department notification, dated 8th February, 1955 regarding the Ryotwari Settlement of Estates taken over in Coimbatore district under section 22 of the Abolition Act. [Laid on the table of the House under section 67 (4), of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948 (Madras Act XXVI of 1948).]*

70. *Notification issued with G.O. Ms. No. 3423, Home, dated 9th December, 1958 exempting certain vehicles registered in Mysore and using Mysore Roads which pass through Madras State from payment of tax under Section 11 (1) of the Madras Motor Vehicles Taxation Act, 1931. [Laid on the table of the House under section 11 (2) of the Madras Motor Vehicles Taxation Act, 1931 (Madras Act III of 1931).]*

71. *Notification issued with G.O. Ms. No. 3508, Home, dated 16th December, 1958 exempting Willy's Station Wagon MSX 2456 belonging to United Nations Children's Emergency Fund and used by B.C.G. Vaccine Laboratory, Guindy from payment of tax leviable under the Madras Motor Vehicles Taxation Act, 1931. [Laid on the table of the House under section 11 (2) of the Madras Motor Vehicles Taxation Act, 1931 (Madras Act III of 1931).]*

72. *Notification issued with G.O. Ms. No. 3527, Home, dated 17th December, 1958 exempting certain vehicles belonging to the World Health Organisation and assigned to the Tuberculosis Chemotherapy Research Project, Madras from payment of tax leviable under the Madras Motor Vehicles Taxation Act, 1931. [Laid on the Table of the House under section 11 (2) of the Madras Motor Vehicles Taxation Act, 1931 (Madras Act III of 1931).]*

73. *Notification issued with G.O. Ms. No. 1681, Local Administration, dated 18th November, 1958 in regard to the appointment of Executive Officer in Kallakudi Panchayat, Tiruchirappalli district under section 28 (1) of Madras Village Panchayats Act, 1950. [Laid on the table of the House under section 113 (4) of the Madras Village Panchayats Act, 1950 (Madras Act X of 1950).]*

74. *Notification issued with G.O. Ms. No. 3567, Home, dated 19th December, 1958 amending the Rule 325 (a) of the Madras Motor Vehicles Rules, 1940 in regard to the provision of Speedometers under section 70 of the Madras Motor Vehicles Act, 1939. [Laid on the table of the House under section 133 (3) of the Motor Vehicles Act, 1939 (Central Act IV of 1939).]*

6th February 1959]

75. ***Notification issued with G.O. Ms. No. 3583, Home, dated 22nd December, 1958 amending Rule 19 of the Madras Children*** *Rules*, 1940. [*Laid on the table of the House under section* 44 (3) *of the Madras Children Act*, 1920 (*Madras Act IV of* 1920).]

76. ***Notification issued with G.O. Ms. No. 45, Local Administration, dated 9th January, 1959 extending the term of office of the Members of the Kalladaikurichi Panchayat, Tirunelveli dis-*** *trict under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950. [*Laid on the table of the House under section* 113 (4) *of the Madras Village Panchayats Act*, 1950 (*Madras Act X of* 1950).]

*B. Reports and other papers.*

13. *Report of the Committee of Privileges (Dina Thanthi Case No.* 2).

14. *Report of the Select Committee on the Madras General Sales Tax Bill*, 1958 (*L.A. Bill No.* 6 *of* 1958).

15. *Short Review of Activities of State Broadcasting for the first Half-year* 1958 (*April to September*, 1958).

16. *Report on the Development of Panchayat Administration in Madras State.*

## Appendix I.

[Vide answer to starred question No. 58 asked by Sri M. Jagannathan and Sri N. K. Palanisami at the meeting of the Legislative Assembly held on 6th February 1959, page 162 supra ]

*Expenditure incurred for publicising he activities of the various Government departments at the Congress Exhibition, 1957–58.*

| | *Name of Department.* | *Number of stalls taken by the department.* | *Expenditure towards stall rent.* | | *Total amount of expenditure.* | |
|---|---|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | | (4) | |
| | | | RS. | NP. | RS. | NP. |
| 1 | Public (Information and Publicity) Department. | 10 | 1,500 | 00 | 9,500 | 00 |
| 2 | Handlooms Department (16 spindles model spinning unit.) | 2 | 300 | 00 | 2,162 | 17 |
| 3 | Rural Development Projects Department. | 6 | 900 | 00 | 4,865 | 00 |
| 4 | Women's Welfare Department .. | 2 | 300 | 00 | 1,800 | 00 |
| 5 | Khadi Department .. .. .. | 10 | 1,500 | 00 | 10,500 | 00 |
| 6 | Agriculture Department .. .. | 25 | 3,750 | 00 | 13,930 | 73 |
| 7 | Animal Husbandry Department .. | 20 | 3,000 | 00 | 12,013 | 67 |
| 8 | Fisheries Department .. .. | 4 | 600 | 00 | 6,020 | 20 |
| 9 | Statistics Department .. .. | 4 | 600 | 00 | 2,999 | 09 |
| 10 | Cinchona Department .. .. | 3 | 450 | 00 | 2,310 | 44 |
| 11 | Forest Department .. .. .. | 4 | 600 | 00 | 1,423 | 98 |
| 12 | Medical Department .. .. .. | 16 | 2,400 | 00 | 6,288 | 98 |
| 13 | Public Health Department .. .. | 10 | 1,500 | 00 | 5,730 | 00 |
| 14 | Corporation—Health Department (Family Planning). | 6 | 900 | 00 | 3,508 | 09 |
| 15 | Irrigation and Sanitary Engineering Department. | 42 | 6,300 | 00 | 32,779 | 00 |
| 16 | Education Department .. .. | 15 | 2,250 | 00 | 10,189 | 32 |
| 17 | Government Museum .. .. | 4 | 600 | 00 | 2,400 | 00 |
| 18 | Co-operation Department .. .. | 23+ (40 sq.ft.) | 3,500 | 00 | 12,550 | 00 |
| 19 | Harijan Welfare Department .. | 3 | 450 | 00 | 3,171 | 99 |
| 20 | Industries and Commerce .. .. | 45 | 6,750 | 00 | 39,442 | 09 |
| 21 | Police Department .. .. .. | 6 | 900 | 00 | 3,000 | 00 |
| 22 | Jail Department .. .. .. | 2 | 300 | 00 | 940 | 25 |
| 23 | Certified Schools and Vigilance Service Department, | 4 | 600 | 00 | 1,500 | 00 |
| 24 | Transport Department .. .. | 2 | 300 | 00 | 1,300 | 01 |
| 25 | Highways Department .. .. | 38 | 5,329 | 27 | 28,539 | 47 |
| 26 | State Electricity Board . .. | 24 | 3,600 | 00 | 24,600 | 00 |
| 27 | Legislature Department . .. | .. | .. | | 3,139 | 43 |
| | | 330 stalls +(40 sq.ft.) | 49,179 | 27 | 2,46,603 | 91 |

6th February 1959]

## APPENDIX II.

[Vide answer to starred question No. 74 asked by Sri K. B. S. Mani on behalf of Sri M. C. Muthukumaraswamy at the meeting of the Legislative Assembly held on 6th February 1959, page 177 supra.]

*Statement showing the number of fire accidents in Nannilam taluk, Tanjore district.*

| *Serial number and village.* (1) | *Number of accident.* (2) | *Loss involved.* (3) | *Relief granted.* (4) |
|---|---|---|---|
| | | RS. | RS. |
| **1954-55—** | | | |
| 1 Karayanpalaiyur .. .. .. | 1 | 120 | 20 |
| 2 Elavangarkudi .. .. .. | 1 | 760 | 70 |
| 3 Deepankudi .. .. .. | 1 | 100 | .. |
| 4 Aladikaruppur .. .. .. | 1 | 95 | .. |
| 5 Peralam .. .. .. .. | 1 | 300 | .. |
| 6 Vadugakudi .. .. .. | 1 | 180 | .. |
| 7 Muthukattalai .. .. .. | 1 | 1,300 | 160 |
| 8 Vishnupuram .. .. .. | 1 | 75 | .. |
| 9 Valavanallur .. .. .. | 1 | 150 | 20 |
| 10 Ammayyappan .. .. .. | 1 | 55 | .. |
| 11 Koothanur .. .. .. | 1 | 75 | .. |
| 12 Uthirangudi .. .. .. | 1 | 60 | .. |
| **1955-56—** | | | |
| 1 Agarathirunallur .. .. .. | 1 | 150 | .. |
| 2 Achudamangalam .. .. .. | 1 | 200 | 25 |
| 3 Peralam .. .. .. .. | 1 | 75 | .. |
| 4 Aladikaruppur .. .. .. | 1 | 20 | .. |
| 5 Kiranur .. .. .. .. | 1 | 175 | 30 |
| **1956-57—** | | | |
| 1 Valayur .. .. .. .. | 1 | 1,000 | 145 |
| 2 Pathur .. .. .. .. | 1 | 370 | .. |
| 3 Tirukkannandeeswaram .. .. | 1 | 1,700 | 300 |
| 4 Koondalur .. .. .. | 1 | 100 | .. |
| 5 Seruppuliyur .. .. .. | 1 | 500 | 30 |
| 6 Vishnupuram .. .. .. | 1 | 400 | .. |
| 7 74. Nemmeli .. .. .. | 1 | 250 | .. |
| **1957-58 and up-to-date—** | | | |
| 1 Koondalur .. .. .. | 1 | 1,200 | 180 |
| 2 Ayyampettai .. .. .. | 1 | 120 | .. |
| 3 Mangudi .. .. .. .. | 1 | 750 | 75 |
| 4 Adalaiyur .. .. .. .. | 1 | 200 | .. |
| 5 Alathangudi, hamlet of Tittanimuttam. | 1 | 900 | 115 |
| 6 Thittaimuttam .. .. .. | 1 | 200 | 30 |
| 7 126. Mahilancheri .. .. .. | 1 | 300 | 50 |
| 8 Sannanallur .. .. .. | 1 | 60 | .. |
| 9 Pulichangadi .. .. .. | 1 | 120 | 25 |
| 10 Perumalagaram .. .. .. | 1 | 250 | .. |
| 11 Vadamattam .. .. .. | 1 | 250 | 30 |
| 12 Kandramanickam .. .. .. | 1 | 130 | .. |
| 13 Valavanallur .. .. .. | 1 | 1,950 | 90 |

[6th February 1959

## APPENDIX III.

[Vide answer to starred question No. 76 asked by Sri V. K. Kothandaraman at the meeting of the Legislative Assembly held on 6th February 1959, page 179 supra.]

| | Name of the district. | Number of buses running on | | |
|---|---|---|---|---|
| | | *Routes covering a distance of 1 to 15 miles.* | *Routes covering a distance from 15 to 75 miles.* | *Routes covering a distance from 75 to 250 miles.* |
| | (1) | (2) | (3) | (4) |
| 1 | Chingleput .. .. .. | 57 (5) | 227 | 37 |
| 2 | Coimbatore .. .. .. | 98 (83) | 285 | 13 |
| 3 | Kanyakumari .. .. .. | 75 (5) | 38 | nil. |
| 4 | Madurai .. .. .. .. | 67 (50) | 244 | 42 |
| 5 | The Nilgiris .. .. .. | 29 (nil.) | 39 | 4 |
| 6 | North Arcot .. .. .. | 27 (16) | 270 | 28 |
| 7 | Ramanathapuram .. .. | 23 (2) | 199 | 3 |
| 8 | Salem .. .. .. .. | 39 (27) | 257 | 41 |
| 9 | South Arcot .. .. .. | 19 (10) | 151 | 21 |
| 10 | Tanjore .. .. .. .. | 44 (23) | 240 | nil. |
| 11 | Tiruchirappalli .. .. | 65 (61) | 215 | 32 |
| 12 | Tirunelveli .. .. .. | 49 (42) | 288 | nil. |
| | Buses plying on routes covered by permits granted by the State Transport Authority, Madras .. .. .. | Nil. | Nil. | 37 |

NOTE:—The figures shown in brackets in column (2) represent the town services in each district.